இந்திய மருத்துவமுறையில்

# வர்மம்-இளம்பிள்ளை வாதம்

(Acupuncture – Poliomylities)

டாக்டர் எஸ். ராஜமணி, பி. ஐ. எம்.,
உதவி மருத்துவ அதிகாரி, வர்ம சிகிச்சை நிபுணர்,
அரசினர் இந்தியமுறை மருத்துவக் கல்லூரி மருத்துவமனை, பாளையங்கோட்டை.

### வர்மம் என்றால் என்ன?

வர்மத்திற்கு பலவகை பெயர்கள் உண்டு. அவை இருந்தபோதிலும் அதனை உயிர்நிற்குமிடம், ஜீவநிலை, பல நரம்புகள் ஒன்றோடொன்று சேரக்கூடிய இடம் எனவும் கொள்ளலாம். ஆங்கிலத்தில் (Junction) என்று சொல்வார்கள். மர்மம், இரகசியம், ஒடிவு, முறிவு என்றும் பலப்பல பெயர்கள் கொண்டு வழங்குவதுண்டு.

மிக்க தொன்மையான இந்திய பெருநாட்டில் அண்மைக் காலம்வரை வெகுவாக வழங்கிவந்த இம்மருத்துவமுறை நம் நாட்டிற்கே உரிய தனிச்சிறப்பு வாய்ந்தது. தற்போது சீனுபோன்ற நாடுகளில் இவ்வர்மம் (Acupuncture) என வழங்கப்பட்டு மிகச் சிறப்புபெற்று பல நோய் வகைகளைத் தீர்க்கும் உன்னத நிலையை அடைந்து வளர்ந்து கொண்டிருக்கிறது. ஆனால் நம் நாட்டவர் இவ்வர்ம கலையின் முக்கியத்துவத்தை இன்னும் சரியாக புரிந்துகொள்ளவில்லை. காரணம் இவ்வர்ம வித்தையை அறிந்தவர்கள் இதைமிகவும் இரகசியமாகவே போற்றி வருகிறார்கள். காரணம் என்ன? இந்த வித்தையை கற்ற ஆங்காரத்தால் ஒருவன், கோபம்வரும்போது நல்லோரையும், பெரியோரையும், ஏழைகளையும், வர்மம்கொள்ளச் செய்து கொல்ல வாய்ப்பு உண்டு. அதனால் இதனை "இரகசியமாகவை" என்று எச்சரிக்கிறார் ஆசான். குமரி மாவட்டத்தில் வாழ்வு பெற்று விளங்கும் இவ்வர்ம பரிகாரம் இந்திய மருத்துவத்தின் பாடப்பகுதியில் ஒருபெரும் பிரிவினைச் சாரும்.

கன்னியாகுமரி மாவட்டத்தில் வந்து பழகியவர்களுக்கு ஆசான், வர்மாணி, என்ற சொற்கள் புதியவை அல்ல. எனினும் பொதுவாக ஆசான் என்றவுடன் அவர்களுக்கு எழுத்தறிவிக்கும் ஆசிரியர்தான் நினைவுக்கு வரமுடியும். வர்மாணி என்றால் ஒருவகை ஆணி என்றுகூட பொருள்கொள்ளதோன்றும். சிறிது பழகியபின்தான் இரண்டு சொற்களும் வர்மபரிகாரம் செய்யும் மருத்துவரைக் குறிக்கும் என்று உணர்வார்கள்.

### வம்சித்தொடர்நோய் அல்லது கசேருகொடி — Spondylities Inflamation of a Vertebrae

முள்ளென்புத்தொடர் அல்லது தண்டுவடம் தாபிதமடைந்து நோயாளி உட்கார முடியாமல் ஒரு புறமாக வளைந்து கழுத்துப் பாகம் கோணலாக காணப்படும். அவ்வாறு காணப்படில் கீழ்கண்ட முறைப்படி வர்ம இடங்களை கண்டுபிடித்து (Physiotherapy — Massage) தொக்கணம் — தடவல் செய்தால் திட்டமாக சுகம் கிடைக்கச்செய்யலாம்.

அடுத்து வரும் குறிப்பின்படி அந்த வர்ம நரம்புக்களைக் கண்டுகொண்டு மருத்துவம் செய்தால் கசேருகொடியின் (தண்டு வட்டத்தின் Spinal card) குறைகளை தீர்த்துவிடலாம். மேலும் தண்டு வடத்திலுள்ள என்புகள் தேய்வுடனே, வளர்ச்சியுற்றோ அல்லது நரம்புகள் ஒன்றோடொன்று பின்னிக் காணப்பட்டாலோ இரு கால்களும் செயலற்ற நிலையில் காணப்படும். அதற்கும் மேற்கூறிய வர்ம இடங்களைக் கண்டுகொண்டு அறுவை சிகிச்சை இல்லாமலே செய்துவிட முடியும்.

வர்ம இடங்களை கண்டுகொண்டு Physiotherd-Massage. மூலம் கீழ்கண்ட வியாதிகளை குணப்படுத்த முடியும். (1) இளம்பிள்ளை வாதம் (Poliomylities) (2) பக்கவாதம். (Hemiplegia) கீல்வாதம் (Romatoid Arthrities) எலும்பு முறிவு (Bone Fractures) கல்லீரல் மண்ணீரல் பெரிதாகக் காணப்பட்டால் (Liver & Spleen enlargement) தீராத தலைவலி (Incurable Head ache) காது நோய் (Ear diseases) இவைகளுக்கு நல்ல சுகம் காண முடியும்.


மேல்சுர்தி வர்மம்
4″
மேலாக கால வர்மம்
4″
கீழாக கால வர்மம்
7″
நட்டெல்லு வர்மம்
8″
மேலண்ட வர்மம்
மேலண்ட வர்மம்
3″
3″
நாயிருப்பு வர்மம்
3″
3″
கீழண்ட வர்மம்
கீழண்ட வர்மம்
7″
குத்திக்கால வர்மம்

அவற்றில் ஒரு சில குறிப்புகளை கீழே காணவும்:—

வர்மத்தில் குழந்தை முதற்கொண்டே அங்காதி பாகங்கள் அமைகின்றன. ஆகையால்தான் இதழ் ஒதிங்கி சூடுபிடித்து பிறை போன்ற ஒரு நாளம் கீழ் நாடியின் கீழே அருகில் பதிகிறது. அதுவே தலையில் நாலு துண்டும் ஐந்து காலங்களும் ஒன்பது தொடுவர்மங்களும் உண்டாக காரணமாகும். பிறகு எட்டுத்துண்டு எலும்பும் ஆறு பொய்கையும், (பொய்கை என்றால் ஒரு குழிவு—உதாரணமாக கழுத்தின் கீழே ஒரு குழிவு தோன்றுகிறதே அதைப் பொய்கை எனச் சொல்லப்படும்.) மூன்று சுழியும், காதில் அறுபத்தினான்கு (64) அறையும்,



புறக்காதில் ஒன்றரை ($1\frac{1}{2}$) விரலுக்குக் கீழே அரைவிரல் சதுரம் இரண்டிலும் இரண்டு சுழியும் உண்டு. காதின் மோடு எலும்பிலிருந்து மூளையின் (Brain) அருகில் வந்து பிறை போன்ற நாளமே உச்சியில் வெளி உண்டாக்குகிறது. புறக்காதில் இருபுறமும் முன்னும் பின்னும் அரை விரல் ஆழம் பதிந்து நாலு சுழியாகி உள்ளது. அதே குழியில் ஒரு விரலிற்குள் இரண்டு பக்கமும் இரண்டு சுழியும் உண்டு. அந்த சுழியில்தான் சப்த இயந்திரம் விசிறி போல் உள் காதறையில் தட்டுகிறது. அதனால் சுழியசைந்து தொனியுண்டாகிறது (நமக்குக் காது கேட்கிறது). முகத்தின் முன்னே மூக்கு, வாய், நாடி, உள்நாக்கு புற அருகில் தொண்டையின் அலகும் மண்டைச்சோற்றிலுள்ள பிச்சுவின் மத்தியிலிருந்து இரண்டு பொடி எலும்பும், மூன்று அடுக்கும், ஒரு சுழியும்,



மூக்கின்மேல் ஒரு துவாரமும், கீழ் இரு துவாரமும், மேலே பாலமும் உண்டென்று அறியவும். அதில் இரண்டு வர்மங்களும், முகத்தில் ஐந்து காலங்களும், மூன்று வர்மங்களும், நான்கு துண்டு எலும்பும், இரண்டு மோடு எலும்பும், ஆறு மொளியும், நான்கு சீப்பெலும்பும் உண்ணுக்கில் இரண்டு துண்டும், அதில் இரண்டு சுழியும் இருக்கின்றன. அதில் 2 வர்மங்களும், 36 சிறு நரம்புகளும் நாடியின் கீழும் மேலுமாக காதினுடைய அருகு சென்னியில் வந்து சுற்றுகிறது. இதில் அதிக நரம்புகள் புஜத்திலும் (shoulder) சங்கிலும் (Trachea) பிடரியிலும், மார்பிலும் (chest) கீழ் நோக்கி குழந்தையினுடைய சர்வாங்கங்கள் வரை உண்டாகின்றன. பிறையில் கழுத்துண்டாகி (36) முப்பத்தாறு நொறுக்கு எலும்பும், ஆறு சுழியும், 3 இசைவும், 6 கண்டமும், 100 உறுப்பும், குரல்வளையின் கீழ் அரைவிரல் சவுக்கம் ஒரு குழியும், அதற்குமேல் உச்சந்தலைவரை தேங்குழலின் துவாரம் போல மண்டையில் வந்து செவி இரண்டிலும் இரண்டாகப் பிரிகிறது. தலையில் நடு வட்டத்தின் மேல்

தலைப்பிச்சும், தவக்குழல் வெளியும், அதன் கீழ் சீப்பு எலும்பு இரண்டும், நொறுக்கு துண்டு இரண்டும், சீப்பெலும்பிலேயே ஒட்டி அதிலிருந்துதான் முக்கோணத் துவாரங்கள் உண்டாகி ஜனனமாகிறது. முக்கோணில் இரண்டு அடுக்கும் 1 சுழியும் உண்டு. இதன் முன் வசமாக கண்ணினுடைய குழியும் இமைகளும் அமைந்துள்ளன. கண்ணினுடைய குழி இரண்டு விரல் ஆழம் உண்டு. பின்பு சிமிளினுடைய சோணுய குழியிலும் மாமிசம் பொதிந்திருக்கும். இதில் சூட்சாதி இயந்திரங்கள் ஒளியாகி தேயு சேர்ந்து கண்ணுக்கு ஒளி கிடைக்கிறது. கண்ணினுடைய சதையிலிருந்து 17 சிறு நரம்புகளும் உதடு, கன்னம் இரண்டிலும் காதுகளின் அருகிலும் வருகின்றன. நரம்பின் உள்ளறையில் முக்கோணின் துவாரமென்ற குழியும், தொண்டைக்குழியும், உள் நாக்கும், சங்கெலும்பில்தான் ஒட்டி வருகின்றன. சரீரத்தினுடைய விபரம் தலை முதல் வர்மங்களும், நரம்புகளும், எலும்புகளும், இசைவுகளும் பிரிந்து முதுகில் ஐந்து கோணத்தில் புஜங்களோடு கூடுகின்றன. அங்கே நக்கள் உருண்டை சிப்பிக்கு 6 எலும்பும், 26 பொடி எலும்பும், 5 சுழியும், 4 பொய்கையும், அசைவு உண்டாகின்றன. அதற்கு முன் வசமாக இருக்கப்பட்ட ஐங்கோணில் 60 சிறு நாளமும், 20 பொடி எலும்பும், தாரை எலும்பிலிருந்து 16 வாரெலும்பும், கூம்பினுடைய கூட்டிலிருந்து 12 சிப்பிவாரும், எட்டெலும்பும், நல்ல பாம்பின் படம் ஆடியதுபோல் குரு நாடியும் அறுகோணில் இருப்பிடம் என்றறியவும். என்ருல் அதன் மறைவு இரண்டிலும் இரண்டு பொய்கையும், கூம்பின் நடு மத்தியில் ஒரு குழியும், சுழியும், அதிலிருந்து இடம் வலம் $1\frac{1}{2}$ விரல் நீக்கி இரண்டு பொய்கையும், சுழியும், பின் காறை என்பிற்கு கீழ் இரண்டு மார்பிலும் அகமாக இரண்டு பொய்கையும் உண்டு. அறுகோணில் முலைக்காம்புகளைச்சுற்றி 8 சுழியும், 3 பதரும், 12 சுற்று நரம்பும் ஊக்கெலும்பினுடைய குழலும், தொண்டையின்கீழ் நரம்பினுடைய அருகும், மையத்தில் ஒரு துண்டும் உண்டு. அதில்தான் புத்தி இருப்பிடமும் குருநாடியும் சேர்ந்து அசைகிறது. முதுகினுடைய தாரையில் பதிந்து 12 சுழியும், கை இரண்டிலும் 12 வசையும், கைமுட்டில் இரண்டு பாரெலும்பும் 6 ஒட்டு நரம்பும் உண்டு. இன்னும் கைமுட்டில் 4 மோணெலும்பும், 2 பொய்கையும், 4 சுழியும் உண்டு. அதன்கீழ்



கழுத்தினுடைய அசை அடங்கல்களும் உண்டு என்று அறிந்துகொள்ளவும். புஜத்தின் சிப்பியின் குறுக்கே வரியில் இரண்டு வர்மங்களிலும் நாலு பொய்கையுண்டு. அதிலிரண்டு காலங்களும், 6 வர்மங்களும் உண்டாகி, பொய்கை நாலிலும், நாலு சுழியும், $\frac{1}{2}$ விரல் ஆழம் குழியும் உண்டு. கைப்பூட்டு என்பதுவே அந்த சுழி என்றறியவும், அதே சுழியின் அமைப்பைக் கொண்டுதான் கைகளுக்கு மொழியிலிருந்து இரண்டு கவராக 4 பொடி எலும்பும் கைக்கூட்டின் மொளியில் வருகிறது. கையின் மணியில் குன்றிமுத்துப்போல் நாலு மணியும், 2 சுளி, 4 பொய்கை, திருகு அதிலிருந்து 2 கோவெலும்பும், 10 சுழியும் நரம்பும். அதே நரம்புகள் 10 விரலிலும், 28 மொளியிலும் கலந்திருக்கின்றன. உள்ளங்கையில் 6 வர்மங்களும், 60 சிறு நரம்புகளும், கவளி வர்மங்கள் 8–ம் உண்டு. அதில் தொழுகாலங்கள் 8–ம்,

810 சிறு நரம்புகளும், அதில் துடுக்கு வர்மம் இரண்டு கைகளிலும், படுகாய வர்மங்கள் தொடு காலங்களும் உண்டாகின்றன. இவைகளின் குறிகுணங்கள் ஏராளம் உண்டு. மேலும் இவ்



வர்மங்கள் கராத்தே, ஜீடோ, அடிமுறைகள், சிலம்பம் போன்றவற்றில் மிகவும் முக்கியத்துவம் பெறுகின்றன.

மேலும் இளம்பிள்ளை வாதத்தில் கால், கை தேய்வுடன் காணப்பட்டு, படுத்த படுக்கை யாகக் காணப்பட்டு நீண்ட நாட்கள் சிகிச்சை செய்தும் பயனடையாதவருக்கு உறுதியாகத் தாக்கணம் (தடவல்) Physiotheropy Massage மூலம் பூரண சுகம் கொடுக்கமுடியும் என்பது என்னுடைய அனுபவத்தில் கண்ட சிறந்த உண்மையாகும். அவைகளில் ஒருசிலவற்றை படத்தில் காண்பீர்கள்.

---

"உண்டதுவும் மாதருடன் கூடிச்சேர்ந்து இன்பம்
கண்டதுவும் நீயெனவே கண்டுகொள்வது எக்காலம்?"

— பத்திரகிரியார்

"சாதி பேதமில்லை அகப்பேய்!
தானாகி நின்றவர்க்கே
ஓதி உணர்ந்தாலும் அகப்பேய்!
ஒன்றுதான் இல்லையடி."

— அகப்பேய்ச் சித்தர்

"வீணாசை கொண்டு திரியாதே யிது
மெய்யல்ல பொய்வாழ்வு பொய்க்கூடு
காணாத வாலையைக் கண்டுகொண்டால் காட்சி
காணலாம் ஆகாயம் ஆளலாமே."

— கொங்கண சித்தர்

## National Service Scheme Unit No. 22
## Youth for rural reconstruction camp Thimmarajapuram.




"Heroes of the Tenth day"

# MEN OF. ACTION



Reconstruction of A Bus stand
"Pick axe is also our Insturments"



Dr. P. Gurusironmani
Director of Indian Medicine
Inaugurates the Camp



"Cold Smile Under hot Sweat"



Free Medical Ckeckup
"Under the green wood"



We too.........

# Madurai University National Service Scheme Unit No. 22
# Government College of Indian Systems of Medicine

PALAYAMKOTTAI, TIRUNELVELI-627002

## ANNUAL REPORT FOR THE YEAR 1976—77

THE N. S. S. (Unit) of our college was started in the year 1972—73. Our N. S. S. Crosess the 5th successful year of its mile stone with great achievements. We have enrolled 100 students as volunteers of the N. S. S. Unit and formed 4 groups, each group having a leader.

Mr. M. Murugesan, Mr. Madhavan, Mr. Purushothaman and Mr. Meenakshi sundara moorthy lead as group leaders and carriedout the work in an appreciable manner. Miss. Indra Devi was the lady representative.

Dr. D. Devasirvatham Samuel, Dr. G. Veluchamy, Dr. Ramdoss, Dr. B. Rajalakshmi rendered their valuable services as staff advisors for these four different groups.

Under the able and efficient guidance of Dr. M. V. Ramanan, Principal, Government College of Indian Systems of Medicine, the Programme Officer Dr. A. M. Fasiuddin Ahamed convened the Advisory Committee on 10—9—76 and chakedout the various programmes for the year 1976—77. It was proposed to carryout the following activities :

1. Youth for Rural Reconstruction.
2. College beautification.
3. Health education.
4. Medical Service.
5. Kitchan garden.
6. Propagating 20 point programme.
7. Adult Education.
8. Helping the School children.
9. Blood doners' club.
10. Science club.

We adopted a village, Thimma Rajapuram, which is 3 miles away from Palayamkottai. The Youth for Rural Reconstruction camp was conducted at the village from 25—1—77 to 3—2—77. 42 students including twelve lady students took part in the camp. The camp was inagurated by Dr. Pon. Gurusironmani, Director of Indian Medicine. Dr. M. V. Ramanan, Principal, Government College of Indian Systems of Medicine and Mr. Kumaraswami, Assistant Professor of Botany participated in the inagural function. Dr. D. Devasirvatham Samuel, Dr. Rajalakshmi, and Dr. Ramdoss played a vital role for the success of the camp.

Mr. Murugesan, Final B. I. M. acted as the Student Leader and Mr. Madhavan, Final B. I. M. as Deputy Leader for the camp.

The student volunteers stayed in the village for 10 days and took part in various activities for the improvement of the village. A medical team consisting of Dr.Ganapathy, Dr. Palani Dr. Jayaprakash Narayanan, Dr. Iqbal, Dr. Narayanan, Dr. Rajalakshmi and Dr. A. M. Fasiuddin Ahamed examined the villagers and gave a free medical check-up. About 1200 villagers were benefited by this.

*Mr. D. S. Vijayakumar, B. Sc., (Ag).* Assistant Horticultirist gave some guide lines about kitchan garden. Seeds were distributed by the volunteers to the villagers.

A Youth Club was formed in the village with 25 villagers as members.

The N. S. S. volunteers took active part in maintaining the Herbal garden

attached to the Gunapadam Department. The plants thrive well on account of regular watering. They also planted a few coconut trees in the campus.

The N. S. S. volunteers explained to the villagers about the Family Planning Programme. Films were screened, explaining the importance of the Family Planning. They gave a very good advice about the environmental sanitation, various aspects of nutrition, immunisation and the importance of drainage system to the villagers.

The poor and physically handicapped persons received the very best attention of the volunteers in getting medicines. They were also advised to take proper care about their health.

The students explained to the villagers about the 20 point programme of our Prime Minister. Posters were exhibited and pamphlets were issued to the villagers. The special officer for the 20 Point Programme supplied us with the required materials. Arrangements were made by the Special Officer and Field Publicity Officer, Govt. of India for screening films about the 20 Point Programme.

Under the Adult Education Programme 30 illiterate adults of Harijan Colony, Kakkan Nagar were taught to read and write. Slates were distributed to them freely.

Our students conducted regular coaching classes for the students of Padappakurichi, Palayamkottur, and Kakkan Nagar. Sports and games were arranged for the students with the help of Mr. Manikandan, Assistant Professor of Physical Education. First-aid training was given to the school children. Games and Moral instruction classes were also conducted for the children.

In addition to the above activities, we have formed a Blood Donors Club and a Science Club which will start function in the near future.

The Programme Officer Dr. A. M. Fasiuddin Ahamed attended a workshop on Rural Reconstruction at Madurai University for two days and underwent Orientation Training for Programme Officers at Sri Avinasi Lingam Home Science College for Women, Coimbatore for 12 days.

My sincere and heartfelt thanks to Mr. V. Dhakshinamoorthy, Director of Youth Welfare, Madurai University, who visited the college and gave valuable advice.

I would like to thank Dr. Pon. Gurusironmani, Director of Indian Medicine, who appointed me as Programme Officer for N. S. S. and gave me a chance to render my services to the public through N. S. S.

I also thank Dr. M. V. Ramanan, Principal, Government College of Indian Systems of Medicine, who guided me every now and then.

My thanks are due to the staff advisers and the group leaders who worked hand in hand with me.

Thank you all.

**Dr. A. M. Fasiuddin Ahamed**
Programme Officer, N. S. S.

# A STUDY ON VELLAIPPOONDU

## (ALLIUM SATIVAM)

Scientific Study Seminar on 26th January, 1977 at 10 A. M.

Siddha Gunapadam, (Pharmocology.)


Dr. A. MOHAMED HASSAN, B. I. M., Ist M. D. (Siddha.)

Dr. S. SUBRAMANIAM, L. I. M., (Reader Gunapadam)

Mr. JOSEPH DOSS, M. SC., (Pharm.) Lecturer.

P. G. Department, Indian Medicine College, Tirunelveli-2.


**Drug** வெள்ளைப்பூண்டு (Allium Sativam)

**Introduction**

Vellaipoondu is a well known herb in Tamilnadu and it is also well known to Indian people in different names. It is used commonly in day to-day diet-like Sambar, Rasam, (and) etc. In ancient days Siddha's had analysed and Characterised its qualities.

(e. g) (1) The Siddha Agasthia in his book, described as follows:—

"சந்நியோடு வாதந்தலை நோவு தாள்வலி
மன்னிவரு நீர்க்கோர்வை வன்சீதம்
அன்னமே!
உள்ளுள்ளிக் கண்டாய் உளைமூல ரோகமும்
போம்
வெள்ளுள்ளி தன்னால் வெருண்டு."
— அ. கு.

(2) The Siddha Therayar in his book as follows:—

"வெள்ளுள்ளி திரிகறி மேற்கையாந் தகரையி
லுள்ளலொன்றுந்தின வுப்புசநோய் கெடும்"
— தே. காப்பியம்

And so, it is plain to all that Vellaipoondu is utilised in diet for its medicinal qualities as per the Siddha fundamental view, "உணவே மருந்து-மருந்தே உணவு",- since cencturies.

**Review of Literature:**

As an easily available drug for preventive purpose used in diet by Indian people which comes under history.

Siddha Agastya says in his book "Agasthiar Gunavagadam" for the following diseases. Those are Muppini, Vatham, Dhalainovu (Head ache), Neerkorvai, Kabam, Moolam etc. (have been indicated.)

Siddha Therayar in his book "Therayar Kappium" it is indicated specially for (the following diseases) Vaitruppusam.

In Materia-Medica Part I (Gunapadam-Mooligai) it is indicated for the following diseases. They are Siru-Katti (Small abcess); Chevidu (deafness) Irumal, Irraippu, Vaitrupusam, Muppini, Vazhinoi, Iyya Thalaivali, Val-noi, Neeretram, Seetha Kazhichal and Moolam.

**Materials and Methods for Botanical Identity**

In the field of Siddha Medicine Vellaipoondu is a common drug which is denoted in the family Liliaceae by the botanists giving the botanical name, Allium Sativam linn.

So far there is no confusion to identify the drug by the Siddha Physicians because of its natural constitution.

The utilised part of it is bulb of the herb.

**Habitat and Habit**

It is a monocot family herb cultivated in the field, having one to one and half feet height. The bulb of the plant where the alkoloids are stored. The colour of the bulb is in whitish yellow. It's taste is (acrid) Karppu.

### Toxicolgical Studies

So far, in any books, it is not told of its toxics and we already have known of its common use in diet.

### Fatal Dose

It has no fatal dose but the maximum dose is 20—30 drops of its extract orally, two to three times of a day as per the book Materia Medica part I — by Vaidya Ratna C. S. Murugesa Mudaliar.

*Toxicity* ... Nil

### Discussions of its five elements composition

As per the five Elements principles of Siddha medicine, (Vellaipoondu thiri) the bulb of the Vellaipoondu is exibiting the only taste acridity (Karppu). And so, as per Siddha fundamental theory the taste acridity is the composition of two main elements air (Katru) and (Neruppu) Heat and the rest in minimum ratio.

Therefore it is concluded that it is a Ushnaveryam drug, (In modern term the Ushnaveerya is comparable to Catobolic).

When the drug is administered orally in human beings it works in the five elements composed living body which is constituted on the basis of Anilam, Azhal and Ayyam (1 : ½ : ¼)

### The action and the five elements composition of Vellaipoondu Thiri

TABLE

***Five Elements Constitution and Action on Mukkurtam (Dhiri Dhosha) of Vellaipoondu***

| Elements | Taste | Veeriyam | Mukkutram |
|---|---|---|---|
| Kartru (Air)<br>Neruppu(Heat) | Karppu | Ushnam | Ayyam<br>Anilam<br>(*Azhal*) |

The drug works in Ushnaveeryam and it is proved that the Drug's alholoids are Poly-sulphides, the loboratory research of Indian Medicine house, Vijayawada-2.

Due to Siddha clinical approach the treat the patient in the three ways Oppurai, Ethirurai and Kalappurai under which the drug acts in above methods.

While the patient is affected by Ayyam, the drug acts on Ayyam and reduces to normal removing the aetiology factor due to any infections or due to diet quality and any acute change in the humour.

While the patient is affected by Anilam, it will bring it to normal due to its stimulant and carminative actions.

While the patient is affected by Azhal, it will work in the OPPURAI (heat to heat) method and thus Azhal would be brought to normal.

When the (pulses) Uirthathukkal Anilam, Azhal, Ayyam) are brought to normal then all the Kosams (systems) would be brought to normal in their works like the Tractor which makes the field to a level, removing it shrubs, high and low levels and etc. of the field.

### The Actions of the Drug

1. Carminative
2. Stomachich
3. Tonic
4. Alterative
5. Stimulant
6. Expectorant
7. Diurectic
8. Anthelmintic

### Composition

The weight of the whole extract is 1.05 W/V and its composition mainly of Poly-sulphides—Indian medicine House, Vijaya-wada-2. Lab Analysis)

### Active Principle

I. As per Siddha, the drug acts orally in Ushnaveeryam, when it in assimilated after all mingled with the digestive tract enzimes.

And the Siddha Bio-chemistry is told through the following equation.

TASTE (SUVAI) — Karpputhanmai (Effect) — Veppam.

Pirivu (Result) Karppu. This is to be explained into volume of books through laboratory analysis.

II. I. V. and subcutaneously effective against gram possitive gram negative organisms and acid fast bacillae–Laboratory–Indian Medicine House, Vijayawada-2.

**Pharmocological Action**

Allium Sativam is about equally effect against gram possitive and gram negative organisms, the activity is equivalent to about 1% pencillin. Leathel dose in aqueous solution is of the order of 60 mg. per kg. given intravenously and 120 mg/kg subcutaneous administration.

The oil it contains is against typical gram possitive gram–negative and acid fast baclli and also to posses antifungal properties.

Ref:- Indian Medicine House Laboratory, Vijayawada-2.

2. Orally, it has been given the actions of the drug in the former heading "ACTIONS OF THE DRUG".

Ref:- M. Medica part I.

3. Externally, due to its antibacterial actions, it used on abcess, ear infections, foementation on swelling.

Ref:- M. Medica part I.

4. It has got action on blood cholestrol level normalising Dr. R. C. Jain, University of Benghazi at Libiya, he has proved this.

Ref:- Indian Express 2nd December 1976. Page 4 col. 2.

5. Soviet Country study on Allium Sativam it is told the alkoloids antibacterial action on 637 bacterias which have no response to pencillin.

Ref:- College Journal 1969–1970 by Dr. S. Subramaniam, L. I. M., Reader in Gunapadam Dept.

**Conclusions**

So far we have gone through the study of Allium Sativam in written literatures and laboratory analysis and further it needs more analysis and clinical investigations in our College for its further details.

**Acknowledgement**

The authors of this paper express their immense gratitude for all post graduate staff and to Dr. Jaffer Sadiqu, Lecturer in Biochemist, Mr. Kumarasamy, Professor, Herbal Botony, for giving views and encouragements for this study on this drug. I request the director to give his valuable advice on the further research of this drug.

**Bibiliography**

1. M. Medica Part I — C. S. Murugesa Mudaliar (Vaidya Ratna).
2. College Journal, 1969—1970;
3. Indian Express, 2nd December 1976.
4. Indian Medicine House Theraputic Index, Vijayawada-2.

*Copy to:*

1. C. C. I. M. New-Delhi–11.
2. D. I. M. — Madras–29.
3. College–Journal, GCISM., Tin.–2.

————

Some doctors full of phrase and fame
To shake their sapient head and give
The ill they cannot cure, a name
Today the doctor gives the disease he
cannot name, a drug or two." — Mathew Arnold.



# நம் நாட்டுப் பாம்புகளும் அதன் நஞ்சு குறிவும்

மோ. லோகமணியன், Final B. I. M.

"பாம்பைக் கண்டால் படையும் நடுங்கும்" — இந்தப் பழமொழியை எல்லோரும் அறிந்ததாலோ என்னவோ, பாம்பு கடித்தது என்ற உடனேயே பயத்தின் காரணமாகவே மரணம் அடைகின்றார்கள். பாம்பு நஞ்சினால் ஏற்படும் மரணம் மிக சொற்பம் என்றும் ஆனால் பயத்தினால் ஏற்படும் மரணம் 100—க்கு 75 பேர் என்றும் ஆய்வு கூறுகின்றது.

இந்தியா—பாகிஸ்தானில் பாம்பு கடியினால் மரணம் அடைவோர் எண்ணிக்கை 1 நாளைக்கு 100 பேர்கள் வரை உள்ளதாக ஆய்வு கூறுகின்றது. சராசரியாக இவர்கள் யார் என்று பார்ப்போமேயானால் கல்வி அறிவு இல்லா பாமரர்கள், விவசாயிகள், மலைத்தொழிலாளிகள். இவர்களும் நம் உடன்பிறப்புக்கள் என்பதை மறக்கக்கூடாது. இப்படிப்பட்ட கொடிய மரண விகிதத்தைக் குறைக்க முடியாதா? நிச்சயமாக முடியும். அதைப்பற்றி இங்கு அனைவரும் புரியும்படி பாம்புவகை, அதன் நச்சு குறிகுணம் (Symptoms), அதன் மருத்துவம் இவற்றைக் காண்போம்.

உலகில் பாம்புகளின் மொத்த எண்ணிக்கை சுமார் 2000 வரை உள்ளன. அதில் இந்தியாவில் மட்டும் 400 வகைப் பாம்புகள் உள்ளன. ஆனால் இவைகள் அனைத்தும் கொடிய நச்சுப் பாம்புகள் அல்ல. கொடிய நச்சு உள்ள பாம்புகளின் எண்ணிக்கை 5. அவைகள்: (1) நாகப்பாம்பு. (2) கட்டு விரியன். (3) பவளப் பாம்புகள். (4) தட்டைவாற் கடற்பாம்புகள். (5) விரியன். மற்றப் பாம்புகள் நஞ்சற்றவை. சில சிறிது விடம் உள்ளவை. பல, நச்சுப் பாம்புகளைப்போல் உள்ள போலிகள்.

நமது மருத்துவத்தில் நச்சுப்பாம்புகளை 64 வகைப்படுத்தி, பாம்புகடி நஞ்சின் வேகம் 10 எனக் கூறப்படுகின்றது. அவை: பல் வேகம், சல வேகம், வன்னி வேகம், வாயு வேகம், சர வேகம், சரப வேகம், சமர் வேகம், சண்டாள வேகம், காச வேகம், அறுதி வேகம் என்பன. பாம்பின் நச்சுப்பற்கள் 4. அவை மேல் வரிசையில் இரண்டும், கீழ் வரிசையில் இரண்டும் ஆகும். மேல்வரிசையிலுள்ள நச்சுப் பற்களுக்கு காளி, காளத்திரி, எனவும், கீழ் வரிசையில், உள்ள விடப்பற்களுக்கு நீலி, நீலகண்டி எனவும் பெயர் வழங்கப்படும். இந் நான்கு பற்களும் தூண்டி முட்கள்போல் வளைந்து பல்லின் மத்தியில் துளைகளுடன் அமைந்திருக்கும்.

பாம்புகளைப்பற்றி மேலும் விரிவாக அறிய வேண்டுமாயின், நமது மருத்துவ நூலான 'நஞ்சு நூல்', 'விட வைத்திய சிந்தாமணி', 'நம் நாட்டுப் பாம்புகள்' போன்றவற்றில் விரிவாகக் காணலாம்.

## பாம்புகடி நஞ்சு குறிகுணம்

கொடிய நஞ்சு உள்ள பாம்புகள் மனிதனைக் கடித்துவிட்டால் கடித்த உடன் விஷப்பல்லில் உள்ள துவாரம் வழியாக விஷப்பையில் இருந்து விஷம் கடித்த இடத்திலுள்ள தசைகள் (Muscles) வழியாக நரம்பிலும் (Nerves), குருதி நாளத்திலும் (Blood Vessel) கலந்து உடல் முழுவதுமாகப் பரவி குறிகுணத்தை சில நிமிடங்களில் காண்பிக்கும்.



நச்சு குறிகுணங்களாவன:—

மார்பு கனத்தல், தாகம், உடல் நடுக்கம், உடல் வலி, வாந்தி, விக்கல், மூர்ச்சை, தொண்டை அடைப்பு, முகம் சில்லிட்டிருத்தல், கண் சிவத்தல் அல்லது கருத்தல், முதுகும் ஆண்குறியும் கோணல், வாயில் நுரைதள்ளல், மலமூத்திரம் ஒழுகல், நவ வாசல்களிலும் குருதி ஒழுகல், கீல்கள் (Joints) தளரல், நாக்கு, உதடு நீல நிறம் அடைதல் போன்ற குறிகுணங்களைக் காட்டும்.

நம் முன்னோர்கள் கூறிய குறி குணத்தை மனதில் பதிய சிலருக்குக் கஷ்டம் என்றால், மேல்நாட்டு அறிஞர் பாம்புகளைப்பற்றி ஆய்வு செய்து கூறுவதைப் பார்ப்போம். இவர் சுருக்கமாக 'PODS' என்கிறார்.

P — Stands for "Puncture"
O — Stands for "Oozing"
D — Stands for "Discolouration"
S — Stands for "Swelling".

நஞ்சு உள்ள பாம்புகள் கடித்து அதன் விடம் உடல் முழுவதும் பரவினால் சில நிமிடங்களில் மேற்கண்ட குறிகுணங்கள் காணும். அதே நேரத்தில் நச்சுத்தன்மை அல்லாத பாம்புகள் கடித்தும் மரணம் அடைந்திருக்கிறார்கள். காரணம், பாம்புகளைப்பற்றிய போதிய கல்வி அறிவின்மையினால் ஏற்பட்ட 'பயம்' தான்.

Dr. Krafft என்பவர் கூறுகிறார்: "Half the number of fetal cases are stated to die from fear, not having the heart at the time to apply any remedical measures".

[குறிப்பு:– பாம்பு விடம் மருத்துவத் துறையில் பல நோய்களைப் போக்க பயன்படுத்தப்படுகின்றது. எனவே பாம்பு விடம் ஒரு கிராமானது, ஒரு கிராம் தங்கத்தைவிட விலை அதிகம். இதையறிந்த மேல்நாட்டினர் பலர் பாம்பு பண்ணைகள் நடத்திவருகின்றனர். நமது நாட்டிலும் அரசு உதவியுடன் சென்னையிலும், பம்பாயிலும், பாளையங்கோட்டையிலும் பாம்பு ஆய்வுக் கூடங்கள் உள்ளன.]

**மருத்துவம் :— வருமுன் காத்தல்**

1. பாம்பு விடத்தால் இறப்பவர்களைவிட பயத்தால் இறப்பவர்களே அதிகம். எனவே பயத்தைப் போக்கல் அவசியம்.

2. புதர், மலைப்பகுதி, காடுகளில் நடந்து செல்லும்போது காலணி போட்டு நடத்தல் நல்லது. காலுக்கும் பாதுகாப்பு மேலும் நடக்கும்போது ஏற்படும் 'ஒலி' தரையோடு தரையாக செல்வதால் அவ் 'ஒலி' கேட்டு பாம்புகள் விலகிச் செல்லும்.

3. வீட்டுத் தோட்டங்களில் சிறியா நங்கை (Polygala Grinersis) பெரியா நங்கை (Polygala Elongata) பங்கம்பாளை (Aristolochia Bractiate) ஆகாச கருடன் (Corallo Carpus epigaeus Hook) போன்ற மூலிகைகள்

வளர்த்தால் அம்மூலிகையின் மணத்திற்கு பாம்புகள் நெருங்குவதில்லை என்று நமது மருத்துவ நூற்கள் கூறுகின்றன.

**நச்சுப்பாம்பு கடித்தவுடன் செய்யக்கூடிய சிகிச்சைகள் :**

நச்சுப் பாம்புதான் கடித்தது என்று கடி வாயில் பல் பதிந்து இருப்பதைப் பார்த்து காணலாம். சில சமயங்களில் பல் முறிந்தும் இருக்கலாம். கூர்ந்து பார்த்து முறிந்த பற்களை எடுத்துவிட வேண்டும்.

2. கடிபட்ட இடத்திற்குமேல் குறிப்பான இடங்களில் ரத்த ஓட்டத்தை தடை செய்வ தற்கானக் கட்டுகள் போடவும். முடிந்தால் ரப்பர் துண்டால் கட்டுவது நல்லது. அவை 10 நிமிடங்களுக்குப்பின் 1 நிமிடம் அவிழ்த்து விட்டு மறுபடியும் கட்டப்பட வேண்டும்.

3. கடிவாயில் நல்ல பாம்பு முதலியவை கள் கடித்த இடத்தில் $\frac{1}{4}$ அங்குல ஆழம், $\frac{1}{4}$ அங்குல குறுக்களவிலும் கூர்மையான மிகவும் சுத்தமான வெந்நீரில் கொதிக்க வைத்த கத்தி அல்லது பிளேடால் கிழிக்க வேண்டும்.

4. வாய்ப்புண் இல்லாதவர்கள் தைரிய மாய் வாய்வைத்து இரத்ததுடன் விடத்தை உறிஞ்சி துப்பி விடலாம். கட்டை சிறிது அவிழ்த்து விட்டு பின் உறிஞ்சி துப்பலாம். இவ்வாறு 1 மணி நேரம் அடிக்கடி உறிஞ்சிய தால் விடத்தை இறக்கி விடலாம்.

5. தூய்மையான துணியால் கடிவாயை மூடி வைத்து உடனே அருகாமையில் உள்ள மருத்துவமனைக்கு கொண்டு செல்ல வேண்டும்.

6. நமது மருத்துவ கொள்கைப்படி பாம்பு கடித்து பல்லழுந்திய இடத்தை முகர்ந்து பார்க்க ஒருவித மணம் உண்டாகும். அம் மணத்திலிருந்து இன்ன பாம்பு கடித்துள்ளது என அறியலாம். உ-ம் நல்ல பாம்பு — தாழை மலர் மணம், விரியன் பாம்பு — புளியம் பூ மணம், மண்டலிப் பாம்பு-மல்லிகை பூ மணம் எவ்வித மணமும் வராவிடில் பாம்புகடியல்ல என்றும் அறிந்து கொள்ள வேண்டும். மேல் கண்ட கொள்கை மருத்துவ ஆய்வின் கீழ் உள்ளன.

7. மருத்துவ ஆய்வின்படி ஆடுதீண்டாப் பாளையின் வேரை (Aristolochia Bractiate) கடியுற்றோரை சுவைக்கச் செய்து அதன் சுவையை அறிந்து என்ன பாம்பு கடித் துள்ளது அல்லது பாம்பு கடி இல்லையா என்பதை உணரமுடியும்.

**நஞ்சு முறிவு**

நமது மருத்துவத்தில் மயக்கத்தைத் தெளியவைத்து உடனுக்குடன் விட முறிவு சிகிச்சை தரப்படுகின்றது. இதற்கு மருந்து களாக ரசாயனம், பற்ப செந்தூரம், மாத்திரை மெழுகு போன்றவைகளில் சில பயன்படுத்தப் படுகின்றன.

'எக்கினுசின்' செடியிலிருந்து தயாராகும் மருந்துகளும், தைலமும் நல்ல பலன் அளிப் பதாக அனுபவபூர்வமாகக் கண்டதாகப் பேராசிரியர் Dr. ராஜேந்திரன் M. A., P. HD. கூறுகின்றார், 'எக்கினுசின்' என்ற செடி இமாலயப் பகுதியில் அதிகம் கிடைக்கின்றது. இதனால் செய்யப்பட்ட மருந்துகள் நமது பகுதி களில் கிடைக்கும்.

நவீன மருத்துவத்தில் நச்சு முறிவுக்கென தனி சிகிச்சை தரப்படுகின்றது.

**உணவு**

நீர்த்துவமான உணவு நல்லது. தண்ணீர் அடிக்கடி தரலாம். குணமடைந்து வருவது அறிந்து மருத்துவரது யோசனைப்படி சத்துள்ள உணவுகள், குருதிவன்மையைப் பெருக்கக் கூடிய உணவுகள் தரலாம். அன்னப்பால், மோர், கஞ்சி, குளுக்கோஸ் போன்றவை தரலாம். காபி, டீ, புகைபிடித்தல், மது, மாது போன்றவைகளைத் தவிர்த்தல் நல்லது.

**ஓய்வு**

கடிபட்டவன் அசைவற்று படுத்திருப்பது நல்லது. ஓய்வு மிக அவசியம்.

# Our Research Laboratories



" Analysing Indigenous Drugs ? "
BIO-CHEMISTRY.





"Experimental Pharmacology What is it ? "



OUR LIBRARY (Source of knowledge)



**Botany Laboratory**
"Preventing Adulteration".



**Pharmacy**
Distillation Process
" Oma Theeneer "

# எலும்பு முறிவு

## (Fracture of Bone)

K. SOMASEKARAN, B. SC.
Final B. I. M.

எலும்பு முறிவு ஏற்படுவதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் உண்டு. அவை:

1. உபகாரணம் (Predisposing Cause)
2. நேர்காரணம் (Exciting Cause)

### உபகாரணம்

**(அ) வயது:**

இளம் பிராயத்தில் பிள்ளைகள் இலகுவாக தவறி விழக்கூடுமாதலால் எலும்பு முறிவு ஏற்படுவது இயற்கையே. இவ்விளம்பிராயத்தில் எலும்பின் அந்தங்கள் முற்றுப்பெருத குருத்தெலும்புவகை (Epiphysis) யாகவிருக்கும். இதிலிருந்துதான் எலும்பு வளர்ச்சி அடைந்து நீண்டு வளருவதினல் உடல் வளர்ச்சியும் ஏற்படுகின்றன. இந்த அந்தங்கள் கடினவகையாக மாறிவந்தாலுங்கூட, எலும்பின் பிரதானமான காண்டத்திற்கும், முனைகளாகிய அந்தங்களுக்கும் நடுவில் வெகு காலம் குருத்தெலும்பு தகடு இருந்து சரியான வயது வந்தபின் தான் இரண்டும்கூடும். இதனல் இளம் பிராயத்தில் எலும்பு முறிவென்ருல் எலும்பு முனைப்பிரிவு (Separation of Epiphysis) என்றே சொல்லவேண்டும். வயது முதிர்ந்தோரின் எலும்பும் இலகுவாக ஒடிந்து போகக்கூடும்.

(உ-ம்) தொடை என்புக் கழுத்து உறைக்குள் முறிவது.

**(ஆ) பொதுநோய்கள்:**

வீதன கோளத்திற்கடியிலிருக்கும் பக்க வீதன கோளம் (Parathyroid) கழலை ஏற்படுவதால் குருதியில் சுண்ண உப்பு அதிகரித்து, அதன் விளைவாக ஏற்படும் நோய்களில் ஒன்ருன (உ-ம்) நார்பை – நீர்வஸ்து நோயில் (Fibro – Cystic disease) என்பு பாதிக்கப்படுகின்றது.

(இ) நரம்பு சம்பந்தமான நோய்கள், கிரந்தி மேக நோயில் என்பு பாதிக்கப்படலாம்.

(உ) என்பு மஜ்ஜையில் ஏற்படும் தாபிதத்தினல் வரும் நோயில் என்பு பாதிக்கப்படலாம்.

### நேர்காரணம்

(அ) பலாத்காரத்தினுலும், நேரடியாக தாக்குவதினுலும், அடிவிழுந்த இடத்தில் என்பு முறிவு ஏற்படும்.

(ஆ) பலாத்காரத்தினல் அடிபட்ட இடத்திற்கு தூரமாக என்பு முறிவு ஏற்படலாம். (உ-ம்) கையை வெளிப்புறமாக ஊன்றிக் கொண்டு விழுவதால் செத்துரு என்பு (Clavicle Bone) முறிவது.

(இ) தசையின் இழுப்பு சக்தியினல் (உ-ம்) முழங்கால் சில் முறிவு ஏற்படலாம். ஒரே சமயத்தில் நேரடி தாக்குதலினுலும், மறைமுக தாக்குதலினுலும் சில நேரங்களில் முறிவு ஏற்பட வாய்ப்புண்டு. (உ-ம்) கால் குளசு, முறிவு ஏற்பட்டு பொருத்தும் விலகி காணுதல்.

### முறிவின் வகைகள்

**1. சாதாரண முறிவு** (Simple Fracture)

எலும்பு ஒரே இடத்தில் வெளிக்காயம் ஒன்றும் ஏற்படாமல் ஒடிந்திருப்பது.

**2. மிசிர முறிவு அல்லது கலப்பு முறிவு** (Compound Fracture)

ஒடிந்த எலும்பிற்கும் வெளிக்காற்றுக்கும் சம்பந்தமுண்டாகும், வெளிக்காயம் இருக்கும்.

**3 சிக்கலான முறிவு** (Complicated)

எலும்பு முறிவோடு இரத்தக்குழாய்கள், நரம்புகள், கணுக்கள், உள் உறுப்புகள் சேதமடைந்திருப்பது.

**4. நொறுக்கப்பட்ட முறிவு** (Comminuted)

எலும்பு பல துண்டுகளாக ஒடிந்து விடுவது.

5. முறிந்த ஒரு பாகம் இன்னெரு பாகத்துடன்மாட்டிக் கொண்டு அசையாமலிருப்பது. (Impacted)

**6. பச்சை கொம்பு முறிவு (Green-stick fracture):-**

சிறு பிள்ளைகளின் எலும்பு வளையுமாதலால் இது ஏற்படும். எலும்பு குறுக்களவில் முற்றும் ஒடியாமலிருக்கும்.

**7. தன்னில் தானே முறிவது (Sponteneous fracture) :-**

முறிவுக்கு வேண்டிய போதுமான பலாத்காரமில்லாவிடினும் நோய்பீடித்திருக்கும் நிலையில் எலும்பு முறிந்து விடுவது.

**8. பள்ளம் ஏற்படும் முறிவு: (Depressed)**

கபாலத்தின் மேல் பக்கம் அல்லது பக்கவாட்டில் முறிவு ஏற்பட்டால், முறிவு ஏற்பட்ட என்பு உள் பதிந்து காணப்படும்.

## குறி குணங்கள்

சேதப்பட்டதாக பக்கத்தில் பார்த்து கொண்டிருந்த ஓர் ஆள் அல்லது சேதபட்டவர் தானே தனக்கு என்னவிதமான விபத்து நேர்ந்ததென்பதைக் குறித்து விவரமாக கூறுவதிலிருந்து முறிவு உண்டா? அது எத்தன்மையது? என்று ஊகிக்க கூடும். பரிசோதனை பின்வரும் திட்டமான குறிகளைக் காட்டும்.

1. எலும்பு ஒடிந்த இடத்தில் வலி காணப்படும்.
2. ஒடிந்த இடத்தில் அழுத்திப் பார்க்கும் போது கடுமையாக வலி ஏற்படும்.

**3. தோற்றம் மாறுதல் :-**

நீண்ட எலும்புகளில்தான் இது விசேஷமாய் காணும். இது பலாத்காரத்தினலும் அல்லது தசைகள் சுருங்கி முறிந்த எலும்பை இழுப்பதினல் அல்லது நிலக்கவர்ச்சியினலும் உண்டாகும். முறிந்த எலும்பு ஒன்றின்-மேலொன்று ஏறிக் கொள்வதினல் உறுப்பு கட்டையாகி விடலாம். அல்லது ஒரு துண்டு ஒரு பக்கமாக விலகிக் கிடக்கலாம். அல்லது முறிந்த பாகம் வளைந்து கோணலாகத் தோன்றலாம்.

**4. முறிந்ததற்கு வேறு காயக் குறிகள் :-**

நேரடிபடும்போதுதான் இது அதிகம். தோல் வழிதல், கிழிதல் அல்லது இடம் நீல நிற மாற்றம், வீக்கம் முதலியன காணலாம்.

5. செயல்தன்மை இழக்கப்படும். அடிபட்ட பாகம் சாதாரணமாக அசைக்க இயலாது.

6. இயற்கைக்கு மாருன அசைவு காணலாம். முறிந்த எலும்பின் முனைகள் ஒன்ருேடொன்று மாட்டிக் கொண்டால் (Impacted fracture), பச்சை கொம்பு முறிவு ஏற்பட்டால் அல்லது மிக வீக்கம் ஏற்பட்டு விட்டால் இந்த அசைவு தோன்ருமலிருக்கலாம்.

**7. உரசல் சப்தம் :-**

உரசல் சப்தம் முறிந்த பாகங்கள் ஒன்றுக்கொன்று சமீபமாயிருந்தால், அழுத்திப் பார்க்கும்போது உணரலாம். அதே உணர்வை நோயாளியிடமும் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். ஒன்ருேடொன்று மாட்டிக் கொண்டிருந்தால் உரசல் சப்தம் கேட்க வாய்ப்பில்லை. ஆதலால் இடத்தை முரட்டுத் தனமாய் அசைத்து நோவுண்டாக்க கூடாது.

## எலும்பு முறிவின் குகரண நிலை
(Pathological condition)

ஒடிந்த எலும்பு முனைகளைச் சுற்றியும், அதன் நடுவிலும் குருதி பெருகும். பின் உறையும். அவ்வாறு உறையும் குருதியினுள் வெண் அணுக்கள், நார் வஸ்து அம்சங்கள் (Fibroblasts) உண்டாகும். புதிய குருதி தந்துகிகளும் உண்டாகும். நார்வஸ்தம்சங்கள் என்பு மஜ்ஜையிலிருந்து உற்பத்தியாகுபவை. இப்படி உண்டாகும் நுண்பொடி வஸ்து (திறந்த காயத்திலிருந்து ஏற்படும் புதிய தந்துகிகளும், இணைப்புத் திசுவிலங்களும்) மற்ற காயங்களில் உண்டாவதுபோலிருந்தாலும் இங்கு நார்வஸ்தம்சங்கள் (இணைப்புத் திசுவை அளிக்கும் ஒரு வித விலம்) எலும்புண்டாக்கும் தன்மையுள்ளவைகளாயிருப்பதால் வித்தியாசமுண்டு. இவ்விதம் ஏற்பட்ட நுண்பொடி வஸ்து (Granulation) எலும்பு வஸ்துவாக மாறிக்கொண்டிருக்கும். இது கடினமாகவும், அழுத்தமாகவும் இருக்கும். ஆதலால் இதற்கு மொக்கு (Collus) என்று பெயர். இந்த மொக்கு ஒடிந்த ஒரு நீண்ட எலும்பு பகுதியில் மூன்று விதமாய் இருக்கும். முறிந்த முனைகளை உறைபோல் சுற்றியிருக்கும் மொக்கு வெளிமொக்கு என்றும், எலும்புக்காம்பின் கடினமான முனைப் பாகங்கள் நடுவில் இருப்பதற்கு நடு மொக்கு என்றும், உள்ளே மத்தி நிணக்கால்வாய் இடத்தில் ஏற்படுவதற்கு உள் மொக்கு என்றும் பெயர்.

முறிந்த முனைகளைச் சரியானபடி பொருந்தச்செய்து சிகிச்சை அளித்து வரும்போது, நாட்கள் செல்லச்செல்ல மிஞ்சிய எலும்புவஸ்து

மறைந்துவிடும். வெளிமொக்கும் உள்மொக்கும் மறையும். நடுமொக்கு மாத்திரம் கடின எலும்பு வஸ்துவாக மாறிவிடும். இரு முனைகளும் நன்ருக பொருந்தி ஆறிவிட்டால் எலும்பு கூடியபின் முறிந்த இடமும் தெரியாதபடி குண மாகிவிடும்.

### எலும்பு முறிவு சிகிச்சை

எலும்பு முறிவிருக்கிறதென்ற சந்தேகம் உண்டானுல் உடனே கிரண வெளிச்ச பட மெடுக்கத் தவறக்கூடாது. கிரண வெளிச்சப் படத்தினுல் எலும்பு முறிந்திருக்கின்றது என்பதை மாத்திரமல்ல, என்னவிதமான முறிவு, இயற்கை அமைப்பிலிருந்து எவ்வாறு மாறியுள்ளது, எப்படி திருத்தி மறுபடி முனைகளை சரிவர பொருந்தச்செய்ய வேண்டும் என்ற பல முக்கிய விவரங்களை அறியலாம். எலும்பை சரியாகப் பொருந்தவைத்த பின்பு படமெடுத்து சரியாக பொருந்தியிருக்கிறதா வென்று திட்ட மாக அறியவேண்டும்.

### முறிவு சிகிச்சையில் முக்கியமான அம்சங்கள்

(1) முறிவு ஏற்பட்ட உறுப்புகளை சுத்தம் செய்தல்.

(2) முறிவின் நிலையை அறிந்து சரியான நிலையில் பொருந்தவைத்தல்.

(3) மீண்டும் பொருந்திய பாகம் பிரிந்து விடாத பொருட்டு அசையா நிலையில் வைத்தல்.

(4) நோயாளிக்கு கஷ்டமின்றியும், பொருத்து விலகாத நிலையிலும் பிடித்து நீவுதல்.

(5) முறிவு கூடியபின் அந்த உறுப்புகளை பழைய நிலைக்குக் கொண்டுவர அப்பி யாசம் செய்வது.

### பொருந்தவைத்தல்

முறிவின் விளைவாக துண்டெலும்புகள் விலகல் ஏற்படும்போது, எலும்பு இந்த தவருன நிலையில் கூடினுல் உறுப்பு கோணு தலும், அது தன் தொழிலை இயற்கையாகச் செய்யமுடியாது போய்விடும்.

இது ஏற்படாதபடி உடைந்த பாகத்தினை இயற்கை நிலைக்கு கொண்டுவந்து முனைகளை பொருந்தவைப்பது மிக அவசியம்.

தசைகள் இழுப்புக் குறைந்து அவை தளர் வதற்காக முறிந்த பாகத்தை எந்த நிலையில் வைப்பது சாத்தியமோ அந்த நிலையில் வைக்க வேண்டும்.

பின்னர் முறிவைச் சரிப்படுத்த முயல வேண்டும். முறிந்த முனைகளை பிரித்திழுத்து (Extension and Counter Extension) இரு முனைகளும் சரியாக ஒன்ருகப் பொருந்தச் செய்யவேண்டும்.

முறிவு ஏற்பட்டபின் எவ்வளவு சீக்கிரம் இப்படி பொருந்த வைக்கின்ருேமோ அவ்வள வுக்கு நல்லது. இல்லாவிடில் நுண்பொடி வஸ்துகள் (Granulation) நிரம்பவந்து கடின மாக பொருந்தவைக்க மிகத் தடை ஏற்படும். பொருந்த வைத்தாயிற்ரு? என்றறிய கிரண வெளிச்சம் உதவியாக இருக்கும்.

### 2. அசையா நிலையில் வைத்தல் (Fixation)

முறிவுகளை சரியாக பொருத்தியபின், உறுப்புகளுக்கு அளவான தப்பைகளை வைத்து கட்டி அசையாது இருக்கச் செய்ய வேண்டும்.

பின்வரும் பொருட்களும் உபயோகிக்கப் படுகின்றன.

(1) மூங்கில் தப்பைகள் (Splints)
(2) குச்சி–தப்பைகள் (Cooch Splints)
(3) மெழுகு பட்டைகள் (Pro-plastic Splints)
(4) பாரீஸ் சாந்து (Plaster of Paris)

தப்பைகளே சிறந்ததாக கருதப்படுகிறது. ஏன்எனில் உறுப்புகளுக்கு அளவாக தயார் செய்து கட்டும்போது, உறுப்பு இயற்கை நிலை யின்றி மாறுபடாமல் இருக்கும்.

கட்டை கட்டி இரண்டு நாட்களுக்கு ஒரு முறை கட்டை பிரித்து நீவிவிடுவதால், நல்ல குருதி ஓட்டம் வருகிறது.

எலும்பும் தசைகளும் கட்டப்பட்டு காற் ருேட்டம் இல்லாத நிலையில் அசையாத நிலை யில் இருந்தால் மெலிவு (Atrophy) அடைய நேரிடும்.

### 3. பிடித்து நீவுதல் (Massage)

முறிவை பொருத்தியபின் அந்த இடம் மீண்டும் விலகிநிலை பெயர்ந்து விடலாம் என்ற சந்தேகம் இருந்தாலன்றி, முறிவை பொருத்திய வுடன் கட்டிவிட்டு, பின் இரண்டு நாட்களுக்கு

ஒருமுறை நீவுதல் மிகவும் முக்கியம். நீவும் போது நோயாளிக்கு வலி இல்லாத அளவில் செய்ய வேண்டும். வெளியில் கடுமையான காயம் இருந்தால் நீவுதலை தவிர்க்க வேண்டும் காயம் ஆறியபின் நீவுதலை தொடரலாம்.

**நீவுதலால் வரும் நன்மைகள்**

(1) வலி குறையும்

(2) தசை இழுப்பு குறையும் (Muscular spasm)

(3) நீவும்போது உறுப்புகளில் ஏதேனும் சிறிய வளைவு அல்லது முறிவு ஏற்பட்ட இடத்தில் கண்ணுக்கு புலப்படாத அளவில் புடைப்பு இருந்தால் அதை சரிசெய்வதற்கும் உதவியாக இருக்கும்.

(4) இரத்தோட்டம் ஏற்பட்டு முறிவு ஏற்பட்ட இடத்தில் வடிகின்ற வடிவஸ்துக்கள் உறிஞ்சப்படவும், தசைகள் நல்ல பலமுள்ள நிலையிலிருக்கவும் (Muscular tone) உதவும்.

(5) இதுபோன்ற நீவுதல் முறிவு கூடிய பின்னரும் செய்யவேண்டும். அதோடு அந்த உறுப்பு எளிதில் செயல்படுவதற்கு அப்பியாசங்களும் செய்யவேண்டும்.

**4. அறுவை மருத்துவம்**

பின்வரும் காரணங்களானல் அறுவை மருத்துவம் செய்து எலும்பு முனைகளை ஒன்ருக பொருந்தச்செய்து, உலோகத்தகடு, ஆணிகள் போன்ற உபகரணங்களால் இணைக்க வேண்டியது நேரிடலாம்.

(a) முறிந்த எலும்பின் முனை தசைகளை இழுத்து வெளியே அதிகமாக தள்ளிக்கொண்டிருக்கும் நிலை.

(b) பொருத்துக்கு சமீபமாய் முறிவிருந்து, அந்த முறிந்த துண்டு மடங்காது மாட்டிக் கொள்ளச் செய்வதை தடுக்க.

(c) நரம்புத் தண்டு (Nerve trunks) அல்லது பிரதமநாடி அற்று போகின்றநிலையில்.

அறுவை மருத்துவம் செய்ய இலகுவாய் தீர்மானித்து விடக்கூடாது. நச்சேறினுல் முன்பிருந்த நிலையைவிட மிக ஆபத்தாய் முடிந்து விடும்.

இரண வெளிச்ச சோதனையினுல் முறிந்த முனைகள் என்ன நிலையிலிருக்கிறது என்பதையும் கவனித்து அறுவை மருத்துவம் அவசியமாயென்று அறியவேண்டும்.

## எலும்பு முறிவோடு கலந்திருக்கக் கூடிய சில சிக்கல்கள் (Complications)

**1. அதிர்ச்சி:**

நோயாளியின் மனம் சஞ்சலம் கொண்டு, அமைதியின்மையால் ஏற்படும்.

**2. ஜன்னி:**

மூன்று வித நிலையாக வரும்.

(a) **ஆரம்பக் குறிகள்:** முறிவு ஏற்பட்ட மூன்றும் நாளிலிருந்து தூக்கம் இல்லாமை, முணுமுணுத்தல், ஆகார வெறுப்பு, மலச் சிக்கல், கை கால் நடுக்கம் ஏற்படும். நோயாளி பரபரப்புள்ளவனுக இருப்பான். நாடி மாறி மாறி யடிக்கும். இவைதான் ஆரம்பக் குறிகள்.

(b) நோயாளி மனப் பயங்கரங்களால் பீடிக்கப்பட்டு, தன்னையோ, சமீபத்தில் நிற்பவர்களையோ அடித்து விடுவான். படுக்கையை விட்டு எழுந்து வலிஇல்லாதவன் போல் முறிந்த உறுப்பை இழுத்துக் கொண்டு திரியலாம்.

(c) அதிகமாக களைத்து இளைத்துப் பலவீனம் ஏற்பட்டு சோர்ந்து விடுவான். உடலனல் அதிகமாகும். தூக்கம் வந்தால் தான் நம்பிக்கைக்கு இடமுண்டு இல்லாவிடில் மரணம் ஏற்படலாம்.

**3. கொழுப்பு மித உண்டை: (Fat Embolism)**

துப்பாக்கிக் குண்டு போன்றவிபத்துகளால் ஒரு பெரிய எலும்பு, துண்டு துண்டாய் நொறுங்கும்படி ஏற்பட்டால், முறிந்த எலும்பின் நடுக்கால்வாயிலுள்ள கொழுப்பு குருதிக் குழாயினுள் சென்று மித உண்டையாக அங்கிருந்து புப்புசத்திற்குள் (Lungs) சென்று தங்கி, கபசுரம் ஏற்படலாம். சந்தேகமிருந்தால் முறிந்த பாகத்தை பொருத்தி கட்டிவிட வேண்டும். நீவுதல் (Massage) வேண்டாம்.

**4. கபக்காய்ச்சல்:**

(புப்புசத்தாபிதம்) (Pneumonia) மிகவும் கொழுப்பு சத்து நிறைந்த மனிதர் அல்லது இருமலிழைப்பு சாதாரணமாக வரக்கூடியவர்கள் அல்லது வயோதிகர் இப்படிபட்டவர்கள் படுக்கையில் அதிக நாட்களிருந்தால் கபக் காய்ச்சல் வந்து விடலாம். இப்படிப் பட்டவர்களை உட்கார்ந்த நிலையில் படுக்கையில் வைக்கவேண்டும்.

5. தவருக முறிவு கூடுதல்: (Mal-union)

பின்வரும் காரணங்களால் இது ஏற்படலாம்.

(a) முதலிலேயே சரியானபடி முறிவை பொருத்த வைக்க தவறிவிடுதல். வியாதியஸ்தனின் வலிப்பு நோய் அல்லது பரபரப்பினுல் அவனந்த இடத்தை அசைத்து நிலை பெயரச் செய்து விடுவது முதலியவை.

(b) எலும்பு நொறுங்கப்பட்டதால் சரியாக பொருந்த வைக்கக்கூடாதசந்தர்ப்பம் ஏற்பட்டு விடுவது.

6. முறிவு கூடாமல் இருக்கும் நிலை: (Non-union)

(a) நார்வஸ்து இணைப்பு: (Fibrous union)

முறிந்த இரு முனைகளையும் நார்வஸ்து சுற்றிக் கொண்டிருக்கும். முனைகள் நடுவில் தசை, நார்வஸ்து போன்றவை குறிக்கிட்டு கொண்டிருக்கும்.

(b) முற்றும் கூடாமை:— (Absolute Non-Union)

எலும்பு முனைகள் தேய்ந்து மெலிவு, (Atrophy) அடைந்த முனையுள்ளவைகளாக இருக்கலாம். இரு முனைகளும் ஒன்றிற்கொன்றுமிக தூரத்திலிருக்கும்.

(c) வயோதிகம், பலவீனப் படுத்தும் நோய்கள். (உ-ம்) கிரந்திமேக நோய், இளைப்புநோய், நீரிழிவு, நரம்பு நோய்கள் முதலியன. (உ-ம்) வயோதிகர் தொடை என்பு கழுத்து முறிவு.

(d) எலும்பு முனை அழிவு (Necrosis), இரத்தக் குறைவு, கழலைகள் புற்று நோய் போன்றவை.

## தசை தாபிதம் (*Myositis*)

எலும்பை ஆழும் தசைகளுக்குள் குருதி பெருகி, வடிவஸ்து உண்டாகி தசைநார்கள் (Musclar fibres) ஒன்ருேடொன்று பின்னிக் கொள்வதினுல் இது ஏற்படும். இதனுல் தசை சற்று கடினமாகும். நீவுதல், அசைப்பதினுல் இதை தடுக்கலாம்.

கடினம் எற்பட காரணங்களில் ஒன்று,

அதிக நாட்கள் ஒரு உறுப்பு கட்டப்பட்டு அவிழ்க்காமலும், நீவி விடாமலும் இருப்பதால் குருதியோட்டம் தடைபட்டு தசை கடினமாகி சுருங்குதல் ஏற்படலாம்.

## குருத்து என்பு ஒட்டு பிரிதல் (Separation of Epiphysis)

இளம் வயதில் எலும்பின் முனைகளில் அது வளருவதற்கு உபாயமான முனைப் பாகம் மற்ற எலும்பு பாகத்தோடு இணைக்கப்பட்டு ஒன்ருக இல்லாமல், அதற்கும் மற்ற கடினமான அகன்ற பாகத்திற்கும் இடையில் குருத்தெலும்பு இருக்கும். இந்த பாகத்தில் இருந்துதான் எலும்பின் வளர்ச்சியுண்டாகும். இதற்கு துளிர் ஒட்டு அல்லதுஎன்பு ஒட்டு (Epiphysis) என்று பெயர்.

இளம் வயதில் என்பு முறிவு என்ருல் அடிக்கடி இந்த என்பு ஒட்டு மற்ற பாகத்திலிருந்து அகன்று பிரிவதாக இருக்கலாம் — தோள், கைபொருத்து, முழங்கால் இப்பாகத்தில்தான் எலும்பொட்டு இணைவது தாமதமாகும். இவ்விடங்களில்தான் அகன்ற நீண்ட வளர்ச்சியும் அதிகமாக உண்டாகும்.

வயது வந்த ஒருவருக்கு பொருத்து விலகும்படி நிகழும்பலாத்காரத்தினுல் இளைஞருக்கு எலும்பொட்டு பிரிதல் நடக்கும். மறைமுக தாக்குதலோடு (Indirect Violence) பலாத்காரம் நிகழும்போது குறிப்பாக உறுப்பானது இழுக்கப்பட்டு முறுக்கலும் (Traction and Torsion) ஏற்படும்போது எலும்பொட்டு பிரிதல் உண்டாகலாம்.

(உ-ம்) ஏதேனும் ஓர் உறுப்பு சைக்கிள் போன்ற வாகனங்களின் சக்கரத்தின் கம்பிகளுக்குள் (Spokes of wheel) அகப்பட்டுக் கொள்ளும்போது. மேற்கூறியபடி பிரியலாம்.

## எலும்பொட்டு பிரிதல் ஏற்படும் இடங்கள்

1. தொடைஎன்பின் (Femur) கீழந்தம் மேலந்தம்.

2. ஆரை என்பின் கீழந்தம் (Radius)

3. புய என்பின் மேலந்தம், கீழந்தம் (Humerus).

4. நளகஎன்பின் (Tibia) கீழந்தம், மேலந்தம்

## குறிகுணங்கள்

1. இளம் வயதில்தான் இந்த சேதம் வரும்.

2. உறுப்பு சக்தியற்ற நிலையிலிருக்கும்.

3. எலும்பொட்டு வரியில் வலியும், தொட்டால் வலியும் உண்டாகும்.

4. சேதமடைந்த இடம் வீங்கியிருக்கும் நீலநிறம் காணப்படலாம்.

5. பொருத்து விலகுதலுக்கும் இதற்கும் வித்தியாசம் பொருத்துகளை சரிபடுத்தும்போது 'கடக்' என்ற ஒலி எழுவது போல் இதை சரிபடுத்தும் போதுகேட்காது.

## இந்திய மருத்துவமுறையில் எலும்பு முறிவுக்கு சில மருந்துகள்

'அர்க்க பிரகாசம்' என்னும் நூல் இலங்கை அரசன் இராவணனால் எழுதப் பட்டது. இந்நூலில் கூறப்பட்ட சில தீநீர்களை அருந்துவதால் எலும்பு முறிவுகள் குணப்படும் என்று கூறப்படுகிறது. அவை:

**1. சங்கிலி பிரண்டை தீநீர்:**

ஒடிவு முறிவு இவற்றால் வருந்தக்கூடிய நோய்களில் நல்ல பலனையும் என்பு வளர்ச்சி யையும் ஏற்படுத்தும்.

**2. பேரரத்தை தீநீர்:**

முறிவு, ரணம் இவற்றை ஆற்றும்.

**3. சங்கிலி பிரண்டை, அரக்கு, கோதுமை, நீர் மருதின் தோல்:**

இவற்றின் தீநீருடன் நெய் சேர்த்து உண்ண என்பு முறிவு, நோய்களால் பாதிக்கப் பட்ட என்பு வளைவு குணப்படும்.

(அர்க்க பிரகாசம்)

**4. முறிந்த எலும்பு கூட லவங்காதி உருண்டை**

லவங்கம்
கடல்நுரை
மைலால்கடி
நீர்முள்ளி விதை

மேற்கண்ட சரக்குகளை தனித்தனி இடித்து தூள்செய்து சிறிது நீர்விட்டு பிசைந்து என்பு ஒடிந்த உறுப்புக்கு அளவாக அடை தட்டி பிசகிய அல்லது ஒடிந்த எலும்பை சரியாய் வைத்து இந்த அடையை அதன்மீது வைத்து துணி சுற்றி நீர்விட்டுக்கொண்டிருக்கவும். ஈரம் உலரக்கூடாது.

(அகஸ்தியர் இரண வைத்தியம்)

இக்கட்டுரையையாக்க உதவிய துணை நூல்கள்:

1. அகத்தியர் ரணவைத்தியம்
2. இரண நூல்
3. அர்க்கப்பிரகாசம்

---

50–ம் பக்கத்தின் பதில்

### பெரும்பாடு நோய்க்கு மருந்து

ஒருபலம் கருநெத்தலியை (கருநெத்தொலி என்பது ஒரு வகைக் கடல்மீன்) கரிசாலைச் சாறுவிட்டு, மைபோல் அரைத்து வைத்துக்கொண்டு; கருத்தாய் தொலித்தெடுத்த (உரித்தெடுத்த) தேங்காய்ப்பால் இருபடி எடுத்து மேற்படி மைபாகத்தை இப்பாலில் கரைத்து, பின்னர் கலவையை அடுப்பேற்றி மெழுகு பருவத்தில் இறக்கி உள்ளுக்கு வேண்டிய அளவு கொடுக்கவும். இவ்வாறு கொடுக்க பெரும்பாடுநோய் எனும் பெண்டிர் நோய் பூரண குணம் பெறும்.

பொருள் தெரிய மருந்தை வெளிப்படுத்தியவர்

— மலர்க்குழு ஆசிரியர்

# வியாதியின் வரலாறு

எழுதியவர் :— **செல்வி ஜி. கீதா,** Final B. I. M.

உலகத்தில் மானிடர் இனத்தில் எவ்வாறு வியாதிகள் தோன்றின என்பதற்கு அகத்தியர் பாட்டாக கூறும் கூற்று பின்வருமாறு:—

"ஆதியிலே பிரமனுக்கும் விஷ்ணுவுக்கும்
மகத்தான தர்க்கம் வந்தவகை ஏதென்ருல்
பாதிரி மலர்தரித்த அயன் பெரியோன் என்ருன்
பதறியே மால் பெரியோன் என்ருன் அப்பால்
வீதிதனில் வந்து இருவரும் யுத்தம் செய்தார்
வேகமொடு பாணங்கள் சூலம் சக்கரம்
நீதியுள்ள கரத்தாலும் முட்டியாலும்
நெடியவனும் மாயனும் போர் கொண்டிட்டாரே.

கொண்டபின்பு இவர்களேயே தணிக்க ஈசன்
கொடுமையுள்ள வியாதிகளே உண்டுபண்ணி
சண்டமாருதமாக இருவருமேல் தாக்க
சாரங்கனும் மாயனுமே சகிக்காமற் தான்
அண்டர்பிரான் அடிபணிந்து போற்றி ஏற்றி
அவர்களுமே தங்கள் பதிக்கு ஏகினுர்கள்
தெண்டனிட்டு வியாதிகளும் எமக்கேதென்ன
தெரிவிப்பன் ஈசனுமே தண்டிக்கத்தானே.

தண்டிப்பது யாதென்னில் தேவர்க்காக
தருவித்தோம் நீங்கள் புவிதனில் சென்று
அண்ட ஒண்ணு அசடர் சண்டாளரான
அக்கிரமம் செய்து அழிகின்ற கன்மிமீதில்
கண்டிதமாய் வாட்டியே பசியைத் தீர்க்க
காட்டினுர் அப்படியே சென்று வாட்ட
சண்டாளர்களும் புவியிலுள்ள மாந்தர்தாமும்
தான்பணிந்து முறையிட்டார் குரு முனியைத்தானே.

தானென்ற பொதிகை முனி தன்வந்திரியொடு
சங்கரன்பால்சென்று அவரடியைப்போற்றி
மானென்ற மனிதர்களே வியாதி சூழ்ந்து
மரணம் செய்திடும் வகைக்கு பயன் ஏதென
கோனென்ற குன்றுவில்லி கிருபை கூர்ந்து
கும்பமுனி தன்வந்திரி கேளாய் நீங்கள்
தானென்ற குன்று கானகத்தில் வாழும்
தற்பரத்தின் பச்சிலேயும் சமூலந்தானே.

தானே கேள் பலசரக்கு அதிலுண்டாகும்
அதனைகொண்டு நீங்கள் பலவிதமாய் செய்து
மானிடரைக் காப்பது உங்கள் மகிமை என்ன
மனவுறுதி கொண்டுமே வகையாய் செய்து
நானேதான் வியாதிதனைப் போக்கடித்து நலமாக
கன்மத்தை நிவர்த்தி செய்து
தானேதான் மணிமந்திர அவிழ்தத்தாலே
தான் போக்கி நூல்களையும் சாற்றினேமே."

இவ்வாறு உலகத்தில் வியாதி தோன்றிய காரணத்தையும் அவ்வியாதிகள் மனிதர்களை துன்புறுத்தும் காரணத்தையும் அகத்திய முனியும் தன்வந்திரியும் மூலிகைகளைக் கொண்டு பலவித அவிழ்தங்களை செய்து நோய்களைப் போக்கும் முறைகளைக் கையாண்ட விதத்தையும் மேற்கூறிய பாக்கள் கூறுகின்றன.

இக்கூற்று மேல்வாரியாகப் படிப்பவர்களுக்கு இன்றைய அறிவியல் நோக்கத்திற்கும் பகுத்தறிவுக்கும் பொருந்தாத கட்டுக்கதை (Cock and Bull Story) போல் உள்ளது.

ஆதலின் இக்கதையைச் சிலர் கண்டு எள்ளி நகைக்கக்கூடும். அரியும் அயனும் தேவர்களாக இருப்பவர்கள் ஒருவருக்கு ஒருவர் சண்டைப் போட்டுக் கொள்வதா? இதுவா தேவர்களது பண்பு என்று கேலி செய்யக் கூடும்.

ஆனுல் இம்மொழிகளிலுள்ள உட்பொருள்களை நுட்பமாக அறிந்து கொண்டவர்கள் இப்பாட்டிலுள்ள சிலேடைக் கருத்துக்களை புரிந்து கொண்டு பாராட்ட முடியும்.

இப்பாட்டிலுள்ள சிலேடைக் கருத்துக்களை புரிந்து கொள்ள கீழ்கண்ட வேருெரு அகத்தியர் பாட்டைக் கவனிப்போம்.

உடலுயிரும் பூரணமு மூன்றுமொன்று
வுலகத்திற் சிறிது ஜனம் வெவ்வேறென்பார்
உடலுயிரும் பூரணமு மெதென்ருக்கால்
உத்தமனேபதினறு மொருநான்குமெட்டு
உடலுயிரும் பூரணமு மயன்மாலீசன்
உலகத்தோரறியாமல் மயங்கிப் போனர்
உடலுயிரும் பூரணமு மடிமுடியுமாச்சு
உதித்தகலை நிலையறிந்து பதியில் நில்லே.

இப்பாட்டிலிருந்து உடல் அயன் என்றும், உயிர் மால் என்றும் பூரணம் (உள்ளம்) ஈசன் என்றும் கருதப்படுவது புலப்படுகின்றது. உடலில் மூளையும் அதன் தொடர்பாயுள்ள நரம்புகளும் சேர்ந்த ஒரு மண்டலத்தை பூரணத்தின் உடலாகக் கருதப்படுகிறது. இம்மண்டலத்தின் அறிவை ஈசனுக கருத உருவகப்படுத்தி சான்ருேர்கள் பேசுகின்ருர்கள். இவ்வுடலில் காணும் அம்சங்களையே சிவனின் அம்சங்களாக கொடுக்கப்பட்டு சிவன் உருவகப்படுத்தப்படுகின்ருன். மூளையும் நரம்பும் வெளுப்பாக இருப்பதால் சிவனை வெண்ணீர் அணிந்தவனென்றும் வெண்ணிற மேனியான் என்றும் சொல்கின்ருேம். மூளை சடை நிறைந்தப் பொருள் போன்று இருப்பதால் சிவன் சடைமுடி உடையவனுகின்ருன். மூளை பனி பூமி போன்று வழுவழுப்பாக இருப்பதால் அவன் பனிமலை மீதிலிருப்பவனுகவும் கருதுகின்ருேம். மூளையோடு ஐம்புல துவாரங்கள் இணைக்கப்பட்டிருப்பதால் சிவனை புற்றுக்குள் இருப்பவனுக கருதுகிருேம். இதே காரணத்தால் புலித்தோலை அணிந்தவனுகவும் கருதுகின்ருேம். (புலித்தோலில் வரிகள் நிறைந்து ஐம்புல துவாரங்களுக்கு ஒப்புமை போல் உள்ளது). மூளை, உடலில் உயர்ந்த இடத்தில் அமைந்திருப்பதால் சிவன் மலையிலே உயர்ந்த இமயமலையில் இருப்பதாகக் கருதப்படுகிறது. மூளையினுள் இளநீர் போன்ற C. S. F. தெளிந்த நீர் கங்கையாக கருதப்படுகிறது. மூளையினுள் உதயமாகும் மனம் (நினைவு, உணர்வு) பிறை சந்திரனுக உருவகப்படுத்தப்படுகின்றது. நரம்புகள் எல்லாம் நாகங்களாகவும், தண்டுவட நரம்பை பிநாகமாகவும் கருதப்படுகின்றது. இந்நரம்புகள் எலும்புகளை கவ்விப் பிடித்துக் கொண்டிருப்பதால் சிவனை எலும்பு மாலையை அணிந்திருப்பவனுக கருதுகின்ருேம். மூளை கபாலத்தில் இருந்து கொண்டு உடலை எழுப்பி நிறுத்தும் சக்தியை உடையதாக இருப்பதால் சிவனை கபாலம் ஏந்தியவனுக கருதுகிருேம். மூளையானது தன்னிடத்தே பாதுகாப்பு ஊர்ந்து அணிந்திருப்பதால் (ie. பா+ஊர்+அணம் என்ற விகிதப்படி) அதை பூரணம் என்றும் சொல்கின்ருேம். மூளையின் உருவம் உத்திராட்சத்தின் உருவம் போல் ஒவ்வியிருப்பதால் அவனை ருத்திராட்சம் அணிந்தவனுக கருதுகின்ருேம். (உருத்திராட்சம்–ருத்திரனுடைய கண்) இக்காரணத்தினுலேயே இவனை ஈசன் என்றும் சொல்கின்ருேம். சன் என்ருல் நன்மை செய்யக் கூடிய; ஈ என்ருல் கண். ஆதலின் ஈசனென்ருல் நன்மை செய்யக் கூடிய கண் உடையவன் என்பது பொருள். இவ்வாறு சிவனுடைய அம்சங்கள் அனைத்தையும் மூளை நரம்பு மண்டலத்தில் (Brain+Nerves System) காணலாம். நமது சான்ருேர்கள் எவ்வாறு சிறப்பாக ஈசனை உருவகப்படுத்தியிருக்கிருர்கள் என்று இதன் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

இதே போல் இருதயமும், இருதயத்தைச் சார்ந்த தமனி, சிரை, ரத்த குழாய்கள் சேர்ந்த மண்டலத்தை (C. Vascular System) உயிர் உடலாகவும், இவ்வுடலிலுள்ள அறிவை மாலாகவும், இவ்வுடலிலுள்ள அம்சங்களை மாலின் அம்சங்களாகவும் உருவகப்படுத்தப் படுகின்றது. இவ்வுடலுக்கு உறுதியற்ற விறைப்பற்ற தோய்வுடைய பண்புடையதால் திருமாலை மாத்திரம் சயனித்திருப்பதாய் (படுத்திருப்பதாக) கருதுகின்ருேம். மூன்று கடவுள்களில் திருமால் மாத்திரம்தான் சயனித்திருக்கும் அம்சத்தைக் காணலாம். இரத்தம் காய்ந்தால் கறுப்பு நிறம் அடைகிறது. ஆதலால் திருமாலை கருநிறம் உடையவனுகவும் கருதுகின்ருர்கள். நீல நிறமுடைய சிரையின் காரணமாக நீலமேனி உடையவனுகவும் கருதுகின்ருேம். இரத்தம் எல்லா அவயங்களுக்கும், சூரியன் எவ்வாறு வெப்பத்தை எத்திக்கிலும் பரப்புகின்றதோ அவ்வாறு வெப்பத்தைப் பரப்ப உதவி செய்வதால் திருமால் சூரியனுடைய அம்சமாகவும் கருதப்படுகிறது. எவ்வாறு சிவனுக்கு பிறை சுடராகிறதோ அவ்வாறு திருமாலுக்கு சூரியன் சுடராகின்றது. எவ்வாறு சூரியன் காலையில் துயில் கலைந்து கீழ்வானத்தில் உதயமாகிறதோ அவ்வாறு திருமாலும் துயில் கலைந்து விழிப்புறுவதாகக் கருதப்பட்டு சுப்ரபாதம் பாடுகிருர்கள். இவ்வாருன அம்சம் சிவனுக்கு கிடையாது. இரத்தம் உடல் சுறுசுறுப்புக்கு பாத்திரமாக

இருப்பதால் இதிலுள்ள சக்தி அம்சத்தை இலக்குமியாக கருதுகிறோம். மிகவும் சுறுசுறுப்பான அம்சமே லட்சுமி அம்சமாகும். சுறுசுறுப்பான வினை அம்சங்களே பொருள் வளர்ச்சிக்கு காரணமாகின்றன. ஆகையால் பொருளுக்கு (பணம் செல்வங்களுக்கு) இலக்குமி இறைவியானுள். இவ்வாறு மேலும் திருமாலின் அம்சங்களை விரித்துக் காணலாம்.

அடுத்து வாய், இரைப்பை, சிறுகுடல், பெருங்குடல், சதை (தொக்கு) சார்ந்த உடலை பிரம்மன் என்று உருவகப்படுத்தப்பட்டு மூன்ருவது கடவுளாக படைக்கப்படுகின்றது. இந்த உடல், உடலுக்கு வேண்டிய எல்லாப் பொருட்களையும் படைத்துக் கொடுக்கின்றது. பிரம்மன் படைத்துக் கொடுத்த பொருட்களை திருமால் ஏற்று பாதுகாத்து வளர்க்கின்ருன். சிவன் இப்பொருட்களை ஏற்று கற்பூரம் எரிவது போல் எரித்து அறிவு ஜோதியாக மாற்றுகின்ருன். இவ்வாறு நம் ஆன்ரோர்கள் இறை அம்சங்களை சாலச் சிறப்பாக படைத்துக்காட்டுகின்ருர்கள். இவ்வாறு அறிந்தவர்களே இந்து மதத்திலுள்ள உயர்வை உணர்ந்து உச்சி மோர்ந்து பார்க்க முடியும்.

மேற்கண்ட விளக்கத்திலிருந்து அரன், அரி, அயன் யார் என்பதும் அவர்கள் எவ்வாறு உருவகப்படுத்தப்பட்டிருக்கிருர்கள் என்பதும் நன்கு விளங்கும். உடல்நிலை தோற்றுவிக்கும் நோயே வாதம் என்றும், உயிர்நிலை பிறக்கும் நோயே பித்தம் என்றும், உள்ளத்தின் காரணத்தால் பூரணத்தின் நிலை உருவாகும் நோயே ஐயம் என்றும் நம் முன்னோர்கள் நோயின் பங்கை மூன்ருகப் பிரித்தார்கள்.

உடல் வளர்ச்சியினுல் உடல் ஊக்கம் பெற்று வளர்கின்றபோது உடல் அதாவது வாதம் மிகுந்து காண்கிறது. இதனையே முதற் கூறிய பாட்டில் பாதிரி மலர் தரித்த அயன் பெரியோன் என்ருன் என்று கூறுகின்ருர். எப்போது உடல் பெருத்து அதாவது வாதம் பெருத்து காண்கிறதோ அதே சமயம் உயிரும் பெருத்து அதாவது பித்தமும் பெருத்து சமன் செய்ய முயலுகின்றது. இதனையே "பதறியே மால் பெரியோன் என்ருன் அப்பால்" என்று கூறப்படுகின்றது. இவ்வாறு இந்த இரண்டு கூறுகளுக்கு மாறிமாறி ஏற்படும் வாதம் உடலின் நோயாக வெளியில் தெரியும்படி எடுத்து காட்டுமளவிற்கு வளர்ந்து விடுகிறது, இதனையே வீதிதனில் வந்திருவரும் யுத்தம் செய்தார் எனவும், வேகமொடு பாணங்கள், சூலம், சக்கரம், நீதியுள்ள கரத்தாலும் முட்டியாலும் நெடியவனும் மாயோனும் போர் கொண்டிட்டாரே என்று கூறப்படுகிறது. உடலில் தோன்றும் நோய் வெளியில் புலப்படும்போது அம்பாலும், சூலத்தாலும் குத்துவதுபோல நோய்களும், சக்கரத்தால் குடைவதுபோல் குடைச்சல்களும், கரத்தாலும், முட்டியாலும் அடிப்பதுபோல் சிற்சில இடங்களில் வீக்கங்களும் உண்டாகின்றன. இவ்வாறு நோய்களில் காணப்படும் குறிகுணங்களே மேற்கூறிய வரிகளில் சிலேடையாக பன்மொழியாக சித்தரிக்கப்படுகின்றன. இந்நிலையில் சிலேத்துமம் (ஐயம்) மேலெழுந்து வியாதிகளை அதிகப்படுத்துகின்றது. அந்நிலையில் வாதபித்தங்களின் வீறு குறைந்து சமன் அடைந்து அவைகளும் நிலைபெறுகின்றன. வியாதிகளும் விலகுகின்றன. இவ்வாறு உடலில் நடக்கும் கூற்றினையே முதலிரண்டு பாட்டுகளில் புலமைபட கூறப்படுகின்றது.

மூன்ருவது பாட்டில் நோய்கள் ஏன் மனிதர்களுக்கு வருகின்றன என்ற காரணங்களை விளக்குகின்றன. அதாவது வாதம் ஏன் மிகுகிறது என்ற காரணம் காட்டப்படுகின்றது. அசடர்களாக வாழுபவர்களும், சண்டாளர்களாக வாழுபவர்களும், சிரமம் இல்லாத காரியங்கள் செய்து அழிகின்ற கன்மிகளும் நோயை அடைவார்கள் என்று கூறப்படுகின்றது. அவர்களிடம்தான் வாதபித்தம் மிகுந்து சமன் இல்லாத நிலை ஏற்பட்டு நோய் தோன்றி குறைகிறது.

நான்காவது பாட்டில் இம்மாதிரி மனிதர்களிடத்தில் வரும் நோய்களுக்கு பொதிகை முனியான அகத்தியரும் தன்வந்திரியும் பூரணமே அதாவது அறிவே அதாவது உள்ளமே அதாவது அகமே உருவகப்படுத்தப்பட்ட சிவனின் துணைகொண்டு மூலிகைகளை ஒவ்வொன்றும் எந்தெந்த நோய்களை போக்கும் என்று கேட்டறிந்து அவைகளை தக்க பல சரக்குகளுடன் சேர்த்து மருந்துகளை செய்து மருத்துவத்தை வளர்த்து மானிடர்களுக்கு வழங்கினுர்கள் என்று கூறப்படுகின்றது. "வாதமாய் படைத்துப் பித்த வன்னியாய்க் காத்து சேட்பச் சீதமாய்த் துடைத்து......" என்ற தேரையர் பாட்டாலும், உடல், உயிர், உள்ளம் (பூரணம்), என்ற மும்மண்டல கடவுள்களான அயன், அரி,

அரன் எவ்வாறு முறையே வாதத்தை வளர்த்து, பித்தத்தால் தர்க்கித்து, சீதத்தால் நோயினை உணரச்செய்து மீண்டும் அவைகள் சமன் அடைகின்றன என்ற முறைமையை புலமைமிக்க பாட்டால் உணர்த்தப்படுகின்றது.

“தேகமே தேவாலயம்” என்ற அடிப்படை தத்துவத்தால் பார்த்தால்தான் சித்தர் பாடல் களின் நேர்மையான அறிவியல் (Siddha Science) நன்கு விளங்கும்.

---

**பொருள் தெரிந்து கொள்ளுங்கள் பார்ப்போம்!**

[துவாலை யிறப்புக்கு மருந்து]

“கிருதத்தொலி கரிசாகினி அதுகேள் பலமறையே
கருதித்தொலி தருபாலிரு படியீலது கரயே
உருவத்தனை பருவத்தெடு உடலில்தரி மறுநாள்
குருதிப்புனல் வருநீர்சொறி குடிபோகுமே யிதனல்”

(பொருள் தெரிய பக்கம் 46–ஐ திருப்புக)

# HISTORY OF EYE SPECIALISTS



*NAGAMUNIVAR*

" கருத்தாய் விழியிற் கடையுற்றுக் கருத்த சோதியதனுள்ளே
மருவாய் வெள்ளை மேலோடி மருவிச் செந்நூலது ஒப்பாய்
உருவாய் மேவித் திரண்டசெவ்வேர் உதித்த தோல்தன் தசைபோல
வெருவாய் வந்த நற்கண்ணில் விலிசங் கொண்டே உரியாயே "

***Art* : *By* *Anandhapadmanaban* III B. I. M.**

## "Royal Surgeons in the Cruel Battle Field"

# செங்களனியிலே சித்த மருத்துவர்கள்

நிலமடைந்தையாள் கர்ப்பிணியானாள், ஈன்றெடுத்துத் தந்தாள் இயற்கை வளங்களை, வளமாயிரம் வந்திட்டாலும் ஆசைகளின் தாசர்களன்றோ அரசகுலங்கள்? ஆதலின் போர்க்கோலம் அலங்கார வேழத்தின்மேல் வில்லேந்திய வேந்தர்களின் போரியல், படையொடு படைமோதல் கலன்களின் இசைகள் ஓலரீங்காரங்கள், கூக்குரல்கள், பிதற்றல்கள், இவற்றிடையே வீரக்களை சொட்டும் விடுதலையான தலைகள், கணவனை இழந்த விதவைகள் போன்று தலைகளை இழந்த சடலங்கள், வாளேந்திய கரங்கள்—வாளாலேயே வீழ்த்தப்பட்டவை. அனாதையான உடலின் அங்கங்கள் அம்புதைத்த வீரநெஞ்சங்கள்—இவற்றையெல்லாம் கண்டு வெட்கி சுருண்ட நத்தைக் கூடு போன்ற துதிக்கைகளின் துண்டங்கள். சிவப்புக் குருதி நதிகளால்—களம் செங்களம் ஆனது.



"படைஆடை போர்த்திட்ட போர்மடந்தை பூப்படைந்தாள்
பாரெல்லாம் சிவந்த குருதி — யாவும் சிவந்தன
காதலனும் காலனின் வரவைஎண்ணி மயக்கமுற்றாள்"
அன்றுசிந்தியது — அவள்சிந்திய ரத்தம் ரத்...த...ம்...

இத்தகைய செங்களனியிலே 'அன்பேசிவம்' என்ற மணி மொழியின் நாயகர்களாம் சித்த வைத்தியர்கள் பிணிபெற்றோரை சிவிகையிலே சுமந்து ஆதுரகூடாரம் சேர்ப்போர் சிலர்; உறுப்புகள் இழந்தோர்க்கு உதவுவோர் சிலர். மருத்துவ—மாண்பர் மயக்கமும் தெளிவிக்கிறார். சிந்தும் செங்குருதி மிகை செல்லல்கூடாதாகலின் மருந்திடும் காட்சி. துண்டித்த அங்கங்களை ஒட்டிட ஓர் மூலிகை, குருதி அடக்க ஓர் மூலிகை, உயிரையும் இயக்க மூலிகைகள்—என்ன இல்லை இவர்களிடம்? என்ன இல்லை நம்மிடம்?

சிவநேய சித்தர்களுக்கு—உறவுமில்லை பகையுமில்லை "நோவுறும் மாந்தருக்காற்றும் தொண்டே சிவத்தொண்டு"—என்பர்.

"யாதும் ஊரே யாவரும் நம்மக்கள்
ஓதும் சித்தமருத்துவம் ஓட்டும் பிணிகளை"

என்று பிணியகற்றமுயலும் பணியில் செங்களனியின் சித்தவைத்தியர்கள், சித்த அறுவை வல்லுநர்களின் திகழ்வு!

முடிவு:

என்ன இல்லை நம்மிடம்! என்ன இல்லை நம்மிடம்!
என்ன உண்டு அவரிடம் அஃதுமுண்டு நம்மிடம்—என்று நாமும்
பிணியகற்றும் பணியில் பெருமானாய் வாழுவோம்! வளர்க சித்தம்!! வெல்க சித்தம்!!!

இவண்
சித்த சிந்தனைச் சித்திரக்காரன்,
**நா. அனந்தபத்மநாபன்,**
இளங்கலை சித்த மருத்துவம், மூன்றும் ஆண்டு.



# ஆலய வழிபாட்டில் சித்த மருத்துவம்

பூ. அருணுசலம், Final B. I. M.

உடல் ஆரோக்கியத்தின் நிமித்தமாகப் பலர் பலவிதமான யுக்திகளைக் கையாளுகின்றனர். அவர்களில் சிலர் காலை, மாலை உடற்பயிற்சியை மேற்கொள்ளுகின்றனர். சிலர் பட்டினி இருக்கின்றனர். சிலர் அதிகாலை நீராடி கடவுளைப் பிரார்த்திக்கின்ருர்கள். இவ்வாருகப் பலர் பலவிதமான ஆரோக்கிய வழிகளை மேற்கொள்ளுகின்றனர். அதற்கென தனியாகவும் நேரத்தைச் செலவிடுகின்றனர். வேறு சிலர் எவ்விதமான உடல் ஆரோக்கிய வழிகளையும் மேற்கொள்வதில்லை.

எங்ஙனமாயினும் மக்கள் ஆரோக்கியமாக இருக்கவேண்டுமெனும் கருத்தினை நமது சித்தர்கள் தம் மனதிற்கொண்டு அவற்றை எல்லா மக்களும் அவசியம் பெறவேண்டுமெனும் நோக்குடனும், ஆலய வழிபாட்டை அமைத்து அதில் ஆரோக்கியத்திற்கான வழிமுறைகளைப் புகுத்தி மக்கள் பயன்படுமாறும் செய்துள்ளார்கள்.

ஆலய வழிபாட்டில் பிரதட்சனம் என்று கூறப்படும் உள், வெளி பிரகார சுற்று தரிசனத்தின் மூலமும், தோப்புக்கரணம் போடுவதன் மூலமும் உடற்பயிற்சியின் பயனையடைகிருர்கள். கோவிலுக்குச் செல்வதினுல் தூய்மையாக நீராடி உடல் ஆரோக்கியத்தைப் பெறுகின்றனர். திருவிழாக்களின்போது விரதம் அனுஷ்டிப்பதால் உண்ணு நோன்பின் பயனை அடைகிருர்கள். இவ்வாருக ஆலய வழிபாட்டின் மூலம் சகல நன்மைகளையும் ஒரே வழியில் பெறுகிருர்கள். இக்கருத்தினை மனதிற்கொண்டு நமது ஔவைப் பிராட்டியார் 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்று அறிவுறுத்தியுள்ளார்.

ஆலய வழிபாட்டில் பயன்படுத்தப்படும் தூபம், தீபம், விபூதி, சந்தனம், குங்குமம், பஞ்சாமிர்தம், புற்றுமண், துளசி, தீர்த்தம், திருமண் என்று நாம் அழைக்கும் பிரசாதங்கள் அனைத்தும் ஆரோக்கிய தத்துவத்தின் அடிப்படையிலும், சித்த மருத்துவத்தின் அடிப்படையிலும் தான் பயன்படுத்தப்படுகின்றன.

### தூபம் (சாம்பிராணி)

சந்நிதியில் சாம்பிராணிப்புகை புகைப்பது தூபம் எனப்படும். இது கிரியா சக்தியைக் குறிக்கும். ஆணவ மலமான அஞ்ஞானத்தைக் கிரியா சக்தியால் அகற்றலாம் என்பது இதன் தத்துவம். தூபம் பாவங்களை அகற்றும் என்பது மதத்தினடிப்படையில் கூறப்படும் விளக்கமாகும். இதன் மருத்துவப் பயனை நோக்கும்போது சாம்பிராணிக்குப் புழுக்கொல்லி செய்கையும், கிருமி நாசினி செய்கையும், மணமூட்டி செய்கையும் இருப்பதால் இது ஆலயத்தினுள் நறுமண மூட்டியும், தொற்றுவியாதிகள் ஆலயத்திற்குள் வருபவர்களுக்குத் தொற்ருமலும் பாதுகாக்கும், மற்ருெரு காரணம், ஆல

யத்திற்குள் சன்னல்கள் இருக்காது. ஆகவே அங்கு மக்கள் கூட்டத்தினுலுண்டாகும் கரியமில வாயுவை சாம்பிராணி புகைப்பதனுல் ஓரளவு மாற்றலாம்.

## தீபம் (கற்பூரம்)

ஆத்மாவின் மலத்தைப் போக்கி ஞானத்தைக் கொடுக்கின்றது. தீபத்திற்கு திரி, கற்பூரம், துணி, நூல், பஞ்சு இவைகளில் எதையாவது உபயோகிக்கலாம். ஆயினும் கற்பூரத்தைப் பயன்படுத்தினுல், இதற்கு முக்கியமாகக் கிருமி நாசினி செய்கை இருப்பதால் கிருமிகள் அழிக்கப்பட்டு சுகாதாரம் பாதுகாக்கப்படுகிறது. மதத்தினடிப்படையில் கற்பூரம் எரிந்தபின் மிஞ்சி இருப்பது ஒன்றும் இல்லை. அதுபோன்று மனிதனும் இறக்கும் போது ஒன்றையும் தன்னுடன் எடுத்துச்செல்வதில்லை என்னும் கருத்தினை வலியுறுத்துகிறது. இக்கருத்தினையே பட்டினத்தாரும் ''காதருந்த ஊசியும் கடைவழி வாராதே'' எனும் அடியாலும், ''பிறக்கும்போது கொண்டுவந்ததில்லை; பிறந்து மண்மேல் இறக்கும்பொழுதும் கொண்டு போவதில்லை'' எனும் அடியாலும் நன்கு விளக்கியுள்ளார்.

## விபூதி

இது தன்னை தரித்தவர்க்கு ஐசுவரியத்தை கொடுத்தலால் (விபூதி) என்றும், இரட்சித்தலால் இரட்சை என்றும், சிவதத்துவத்தை விளக்குவதால் வசிதம் என்றும், பாவங்களை மட்டுமல்லாது நோய்களையும் நீக்குதலால் பஸ்பம் என்றும் பெயர் பெறும்.

## அடிப்படைத் தத்துவம்

இதை அணிவதால் உடலின் துர்நாற்றம் அகலும். அன்றியும் இத்திருநீறு யாவரும் முடிவில் பிடிசாம்பல் ஆவர் என்ற தத்துவத்தை நமக்கு உணர்த்தி நீயும் இத்தகைய நீராய் சிறிது காலத்திற்குள் முடிவாய் ஆதலால் உன் வாழ்க்கையும் தூய்மையுடனும், இறைவன்மீது உற்ற பற்றுடனும் இருத்தல் வேண்டும் என எச்சரிக்கின்றது. பசுவாகிய ஆன்மாவின் மலம் நீராகிப் பின்னரே சிவன் சீவன் ஆகின்ருன் என்ற தத்துவத்தையும் இது வெளிப்படுத்து கின்றது. எனவே விபூதி மத சம்பந்தமாகப் பயன்படுத்தப்பட்டாலும் அது ஆரோக்கியத்தின் அடிப்படையில் அமைந்ததேயாம்.

''பூச இனியது நீறு புண்ணியமாவது நீறு
பேச இனியது நீறு பெரும் தவத்துவர்க்
கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தமதாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருவாலவாயான்
திருநீறு

என்னும் திருநீற்றுப்பதிகப் பாடலால் ஆலய வழிபாட்டில் திருநீற்றை வழங்குவதன் தத்துவங்கள் நன்கு விளங்கும்.

## சந்தனம்

இதனை ஆலயங்களிலும், சுபகாரியங்களிலும் வழங்குவதை நாம் பார்க்கிருேம். இதை வழங்குவதன் நோக்கம் என்னவெனில் இதற்குக் குளிர்ச்சி உண்டாக்கும் தன்மையும், மணமூட்டும் செய்கையும் இருப்பதால் உடலில் உள்ள வெப்பத்தை நீக்கி குளிர்ச்சியைத் தந்து உற்சாகத்தை உண்டுபண்ணுகிறது. பரமசிவனது நெற்றிக்கண்ணை நினைப்பூட்டுதற்கு அடியார்கள் திலகம் அணிகிருர்கள் எனக் கூறப்பட்டிருப்பினும், பல நரம்புகள் 'ஆக்கினை'யில் ஒன்றுகூடுவதால் அவைகட்கு வெப்பம் ஏற்படாதிருக்க குளிர்ச்சி உடைய சந்தனத்தைத் திலகமாகப் புருவ மத்தியில் இடுகிருர்கள்.

## குங்குமம் :-

இதுவும் பரமசிவனது நெற்றி கண்ணை நினைப்பூட்டுதற்கு திலகமாகபுருவமத்தியில் இடுகிருர்கள். இதில் படிகாரமும் (சுண்ணும்பும்), மஞ்சளும் சேருகின்றது. இதில் உள்ள மஞ்சளுக்கு புழுக்கொல்லி செய்கையும் தலைவலியைப் போக்கும் தன்மையும் இருப்பதால் நெற்றியில் அணிய சிறந்தது. மேலும் குங்குமம் அணிந்தவர்களை ''மெஸ் மெரிசத்திற்கு'' உட்படுத்த முடியாது என்பது மரபு.

## பஞ்சாமிர்தம் :-

இதனை ஆலயங்களில் பிரசாதமாக வழங்குவதன் நோக்கம் என்னவெனில் இவைகட்கு சிறப்பாக (பால், பழங்கள், சர்க்கரை, தேன்) மலமிளக்கி செய்கையும் உடல் உரமாக்கி செய்கையும் இருப்பதால் ஆலய வழிபாட்டின் மூலம் இதன் பயனை மக்கள் அடையுமாறு மதத்தின் அடிப்படையிலும் மருத்துவ அடிப்படையிலும் வழக்கில் நியமித்துள்ளார்கள்.

**புற்றுமண் :**

இதனையும் ஆலயங்களில் பிரசாதமாக வழங்குகின்றனர். காரணம் என்னவெனில் இம்மண்ணிற்கு குளிர்ச்சி உண்டாக்கும் தன்மையும் புழுக்கொல்லி செய்கையும் இருப்பதால் இது உடலில் தோன்றும் வெப்புப்பிணிகளைப் போக்கும் வல்லமை உடையது என்றமருத்துவ அடிப்படை புதைந்துள்ளது. ஆகவே இதை தெய்வத்தின் பெயரால் மத அடிப்படையில் வழங்குகின்றனர். நவீன மருத்துவத்தில் பாம்பு விடத்தை பல நோய்களுக்கும் பயன் படுத்தலாம் என கண்டறிந்திருக்கின்றார்கள். இம்மண் பாம்பின் உறைவிடமாகிய மண். ஆதலால் இம்மண்ணில் பாம்பு விடம் கலந்திருக்கலாம் இதன் காரணமாக பல நோய்கள் நீங்கலாம் எனக் கொண்டாலும் இது ஆராய்ச்சிக்குரிய விஷயமாகும்.

**துளசி :**

வைணவ ஆலயங்களில் இதை பிரசாதமாக வழங்குவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். திருமாலுக்கு மாலையாகப் பயன்படுத்தப்படும். இதற்கு முக்கியமாக கோழையகற்றிச் செய்கையும் உள்ளழலாற்றிச் செய்கையும் இருப்பதால் விஷ சுரம் பரவாமல் தடுக்கும் வல்லமையும் இருமல், இரைப்பு போன்ற புப்புச நோய்களையும் போக்கும் தன்மை இதற்கு உண்டு என்னும் மருத்துவ அடிப்படையில் இதை வழங்குகிறார்கள். மேலும் இதனை உட்கொள்ளில் இது பேய் போல் ஆடுகின்ற வெறி நோயையும் மூக்கிலிருந்து நீர்பாயும் பீனிச நோய்களையும் தடுக்கும். உடலின் வெப்பத்தையும்போக்கும். இதனை ''போலோட்டி வித்து திரிப்புண் பீனிசப் பிணியை மேலாட்டி வித்து விளங்குமே — சால விழுந்து முடர்க்கு வெப்பு வராமல் ஒட்டும் பிருந்தமை பைத்தியத்தைப் பேய்''.

**தீர்த்தம் : (ஏலநீர்)**

இதுவும் வைஷ்ணவர்களின் ஆலயங்களில் புனிதப் பொருளாக வழங்குகிறார்கள். ஏனெனில் இதற்கு முக்கியமாக அகட்டுவாய் அகற்றி செய்கையும் பசித் தீ தூண்டி செய்கையும் இருப்பதால் இது உடலுக்கு நன்மை பயக்கும். என்னும் மருத்துவ பயனை நோக்கியே ஆலயங்களில் இதனை வழங்கும் முறை ஏற்பட்டுள்ளது என்பதை நாம் அறிய வேண்டும்.

**ஆலய வழிபாட்டில் விக்கிரகங்களை பயன் படுத்துவதன் உட்பொருள்.**

ஆலயங்களில் நிலை நிறுத்தப் பெற்றிருக்கும் திரு உருவங்களுக்கு விக்கிரகம் என்று பெயர். இறைவனிடம் பேரன்பு கொண்ட அடியார்கள் இறைவனது திருவுருவத்தை படங்களிலும் ஆலய விக்கிரகங்களிலும் வணங்கி வருகின்றனர். விக்கிரகங்களில் சில சுயம்பு வாகவே (தானுகவே) முளைத்தவையும் உண்டு எனக் கூறுகிறார்கள். விக்கிரக வழிபாட்டின் போது பன்னீர், சந்தனம், தயிர், பால், நெய், அன்னம், விபூதி, பஞ்சாமிர்தம் போன்ற தூய்மையான பொருட்களை அபிசேகமாக பயன்படுத்துவதை நாம் காண்கிறோம். அவ்வாறு பயன் படுத்துவதையும் அதன் உட்பொருளையும் ஆராய்ந்து பார்க்கும்போது சில உண்மைகள் புலனாகின்றது.

உலோகம், பாடாணம், கல், இவைகளால் தனித்தும் கலவையாகவும் ஆக்கப்பட்ட உருவச் சிலைகள் சில இடங்களில் இருப்பதாக கூறுகிறார்கள். நவபாடாண விக்கிரகம் நவ பாடாணக் கட்டு, பஞ்சலோக விக்கிரகம் இவைகளும் சில இடங்களில் இருப்பதாக கூறுகிறார்கள். நவபாடணங்களால் ஆக்கப்பட்ட விக்கிரகங்கள் மீது முன் கூறியுள்ள பொருட்களை அபிசேகித்து அதை அடியார்களுக்கு பிரசாதமாக வழங்குகின்றனர். இவற்றை உண்பதால் உடலில் தோன்றும் எல்லாப் பிணிகளும் அகலுவது உண்மையாகும்.

**முடிவுரை :**

நம் முன்னோர்கள் ஆலய வழிபாட்டின் போது கையாண்ட முறைகள் பயன்படுத்திய பொருட்கள் யாவும் உடல் நலனையும் கருதி ஏற்படுத்தப்பட்டவையாகும். சாதாரணமாக நோய் நீங்கி வாழச் சில நெறிகளை பாமர மக்களுக்கு கூறினால் அதைக் கடைபிடிக்க மாட்டார்கள். எனவே இவை '**கடவுள் என்ற பெயரால்**' ஆலயங்களில் அவைகளை பயன்படுத்தி அதன் பயன்களை மக்கள் பெறுமாறு செய்து நோயினின்று உடலினை பாதுகாக்கும் வழியினை ஆலய வழிபாட்டின் மூலமாக செய்துள்ளார்கள் என்பது தெரியக்கிடக்கின்றது.

---

# மேகக் கட்டிகள்

மூ. முருகேசன்,
நான்காமாண்டு,
இந்தியமுறை மருத்துவ கல்லூரி

"மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர்
வளி முதலா எண்ணிய மூன்று"

என்னும் பொய்யாமொழியின்படி உணவாதி செயல்கள் தன் உடம்பின் அளவிற்கு மிகினும், குறையினும் வாதம், பித்தம், சிலேட்டுமம் ஆகிய மூன்று நோயினை உண்டாக்கும்.

### தோன்றும் வழி:

உணவு, செயல் விகற்பத்தால் உண்டான மேகநீருக்குத் தொடர்பு நோயாக ஏழு உடற்கட்டுகளைப் பாதித்து மேகக் கட்டிகள் தோன்றுகிறது.

"கன்னி மயக்கத்தால் கண்டிடும் மேகமே"
— திருமூலர்

"கோதையர் கலவி போதை
கொழுத்த மீனிறைச்சி போதை
பாதுவாய் நெய்யும் பாலும்
பரிவுடனுண் பீராகில்
சோத பாண்டுருவ மிக்க
சுக்கில பிரமேகந்தான்
ஓது நீரிழிவு சேர
வுண்டெனவறிந்து கொள்ளே"
— அகத்தியர் 1200

"உட்டிண ரோகத்தாலும் உறும்பெரும் பசியினுலுங்
கட்டவிழ் கோதை மாதர் கலவி மட்டிலாமையாலும்
முட்டரு நாலுமாறு மும்மூன்று மொன்று மென்று
திட்டமாய் வருவதென்று திருமுனியருளிச் செய்தார்"
— அகத்தியர் 1200

அளவு கடந்த இனிப்புச் சுவையுள்ள பொருள்களை உண்ணல், நெய், பால், கள், இறைச்சி முதலிய பொருள்களை உண்ணல், வேகாப் பொருள்களை உண்ணல், மிகு உணவு, அதிக உஷ்ணம், அதிக பசி, மிகுந்த கலவி, நோயுள்ள பெண்களுடன் கூடுதல் இவற்ருல் மேகநீர் 20 தோன்று கிறது. மேகநீர் இருபதின் குறிகுணங்களை யும், தன்மையையும் பொறுத்து வளிக் குற்றத்தில் நான்கும், பித்தக்குற்றத்தில் ஆறும், ஐயக் குற்றத்தில் பத்தாகவும் வகுத்துள்ளனர்.

### இயல்:

மேகநீர் உடலில் ஊறி உடல் வன்மை யைக் கெடுத்து ஆங்காங்கு சிறு பருக்கள் அல்லது சிறுகட்டிகளை உண்டாக்கும். சில சமயம் பருக்கள் அல்லது கட்டிகள் பிறக்கா மலே சொறிந்த இடத்தில் புண்பட்டு சினைத்து பெருந்துன்பத்தை உண்டாக்கும் இயல்புடையது.

### முற்குறி குணங்கள்:

கட்டி ஏற்பட்ட இடத்தில் வியர்த்தல், தோல் சுருங்கி உலர்தல், நமைச்சல், சொறிவதால் குருதி வெளிப்படுதல், புண் ஆருது புரையோடி அழுகல் சதை வெளிப் படுதல், சில சமயம் கடினத்துவம் பெற்ற கட்டிபோலாகி துன்புறுத்தல் முதலிய முற்குறிகளை உடையது.

**நோய்எண் :**

மேகக் கட்டிகளின் தன்மையையும், குறிகுணங்களையும் பொறுத்து பத்து வகையாகப் பகுக்கின்றனர்.

**1. கடுகுக்கட்டி :**

"கடுகுப் பிளவையே காணுடல் முற்றிலும்
கடுகினளவதாய்க் கடுகிடமின்றி
கடுகத் தோன்றியும் கடுகு உடைந்துமே
கடுகமிக வலி காட்டுமுணரிதே".

கடுகு வடிவத்தில் சிறுசிறு கட்டிகளாக உடல் முழுவதும் கடுகு புகுத்த முடியாத அளவு நெருக்கமாக உண்டாகி மிகுந்த வலியை உண்டாக்கும் தன்மை உடையது.

**2. கடலைக்கட்டி:**

"கடலைப் பிளவையே காணுடல் முற்றிலும்
கடலையளவிலுங் கண்டதின் வடிவிலும்
இடமில்லாதுரி இயற்றிடும் வலியதைத்
திடமதாயறி செப்பினர் சித்தரே".

உடல் முழுவதும் கடலையின் வடிவத்தில் சிறிதும் இடைவெளியில்லாது தோன்றி மிகுந்த வலியை உண்டாக்கும்.

**3. நிலப்பூசினிக்கட்டி:**

உடலில் நிலப்பூசினிக் கிழங்கின் அளவும், வடிவும் ஒத்த ஒரே கட்டியுண்டாகி தாங்க முடியாத வலியையும், நீர் வடிதல், சுரம் முதலிய பல துன்பங்களை விளைவிக்கும்.

**4. விப்புருதிக்கட்டி:**

தோலின் மேலாவது அல்லது சதையின் மேலாவது பருத்து வட்டமாகவேனும், நீளமாகவேனும் வளர்ந்து மிக்க வலியோடு சிலவேளை உடைந்து சீழ்வழியும் தன்மையுடையது. சிலவேளை உடையாமல் அமுந்தி மறைவதும் உண்டு. சிலவேளை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்தில் புதிது புதிதாய்த் தோன்றி மறைவதும் உண்டு.

**5. மடக்குக்கட்டி:**

கீல்கள், பிட்டம், தொடை, முதுகு முதலிய இடங்களில் உண்டாகும். அடி அகன்று ஓரங்கள் தடித்து சிவந்து நடுவில் குழிந்து கருநிறம் அல்லது கருஞ்செம்மை நிறத்துடன் காணும். தாங்கமுடியாத வலி, வியர்வை காணும். கட்டியினின்று நீர் பெருகும்.

**6. ஆமையோட்டுக் கட்டி:**

ஆமையோட்டைக் கவிழ்த்தியது போன்ற வடிவத்தில் மினுமினுத்து நாளுக்கு நாள் பெருத்துக் கொண்டே வந்து சிறு சிறு கண்கள் தோன்றி அக்கண்களிலிருந்து சீழ் வடியும் தன்மை உடையது.

**7. பேய்ச்சுரைக் கட்டி:**

நெருப்பாற் சுட்டதுபோல் எரிச்சலுண்டாகி பின்னர் கருஞ்செம்மை நிறமான கொப்புளம் பிறந்து பேய்ச்சுரைப் பிஞ்சின் வடிவில் பெருத்து காணும். அடி சிவந்து வீங்கி தாங்க முடியா வலியுடன் சுரம், மயக்கம், சோர்வு, நீர்வேட்கை ஆகிய துன்பங்களும் தொடரும்.

**8. அதோமுகக் கட்டி:**

இடுப்பிலாவது, வயிற்றிலாவது மிக்க பருமனுக கட்டி தோன்றி உடலை நிமிரவொட்டாமல் கூனும்படி செய்யும். மேலும் வியர்வை, வலி, கெட்ட நீர் வெளிப்படல், வெப்பு, மிக்க கறுமை நிறப்பூச்சு போன்று மேல் பக்கத்தில் காணுதல், அமுத்தினுல் உள்ளமுந்துதல் முதலிய குறிகுணங்கள் காணும்.

**9. வலைக்கண் கட்டி:**

கட்டி உண்டாகும் இடத்தில் எரிச்சல், குத்தல், குடைதல் என்னும் குறிகுணங்களைத் தொடர்ந்து தடித்து, சிவந்து, வீங்கி வளரும். மரத்தின் வேர்களைப்போல் பல நாடி நரம்புகளைச் சார்ந்து குழம்பு போன்ற நீரைச் சொரியும். பின்னர் நாளுக்கு நாள் பெருத்து வலையின் கண்கள் போன்று அதிகக் கண்கள் தோன்றி மிக்கத் துன்பங்களை விளைவிக்கும்.

**10. கூட்டுக் கட்டி:**

உடலில் பல கொப்புளங்கள் பிறந்து அவற்றுள் சில அல்லது பல ஒன்று சேர்ந்து ஒரு பெருங்கட்டியை உண்டாக்கும். தாங்க முடியாத வலி, எரிச்சல் முதலிய மிக்க துன்பங்களை உண்டாக்கும்.

### பொதுக் குறிகுணங்கள்:

பொதுவாக 40 வயதுக்கு பின்னரும் அதிகமாக ஆண்களுக்கும் காணப்படுகிறது. தோல் உரப்பாக உள்ள இடமான கழுத்தின் பின்பகுதி, வலுவற்ற திசுக்கள் காணப்படும் இடங்களிலும் தோன்றுகிறது.

கட்டிகள் நாளுக்கு நாள் தடித்து வீங்கி மிகுந்த வலியை உண்டாக்குதல், பரவி வருதல், கட்டிகள் பழுக்குந்தருவாயில் தோல் சுருங்கி கருத்து காணுதல், கொப்புளங்கள்போல் பருக்கள் உண்டாகி சீழ் வடிதல், சில சமயம் சீழ் முற்றிலும் வெளியாகாமல் கட்டியிலுள்ள சதை அழுகிச்சீழும், சதை அழுகலும் சேர்ந்து வெளிப்படுதல், புண் எளிதில் உலராத நிலையில் புரையோடுதல் முதலிய குறிகுணங்கள் காணப்படும்.

மேகக் கட்டிகள் முதுகிலும், பிட்டத்திலும், புறங்கழுத்திலும், தோளிலும் உண்டானல் இராசபிளவை எனவும், மற்ற இடங்களில் கட்டிகள் தோன்றின் பக்கப்பிளவை எனவும் பகுக்கின்றனர்.

### தீராத நிலை:

சாரம், செந்நீர், சதை ஆகிய உடற் கட்டுகளை பாதிக்கின்ற மடக்குக்கட்டி, ஆமையோட்டுக் கட்டி, வலைக்கண் கட்டி தீரும். கொழுப்பைப் பற்றி பிறக்கும் விப்புருதிக் கட்டி, நிலப்பூசினிக் கட்டி மற்றும் மார்பு, அடிமுதுகு, முலைக்காம்பு, தோள், குதம், உச்சி, கீல்கள், கால் கை விரல்கள், அக்குள், கழுத்தின் பின்புறம், அரையிடுக்கு, தொடைச்சசதை, கண்டச்சதை ஆகிய இடங்களில் தோன்றும் மேகக்கட்டிகளும், கூட்டுக்கட்டியும் அரிதில் தீரும்.

முகத்தில் காணப்படும் மேகக்கட்டியால் நச்சுத்தன்மை கபால நரம்பில் விரைவாக பரவுவதால் மிகவும் அபாயத்தை விளைவிக்கிறது.

### மாறுபட்ட கணிப்பு

வினத்தேர்வு: கட்டி எப்பொழுது தோன்றியுள்ளது? பிறவியிலே உள்ளதா? எவ்வாறு கட்டி தோன்றியது? அடிபட்டதைத் தொடர்ந்து உடனே தோன்றியதா அல்லது படிப்படியாக வளர்ச்சியடைந்துள்ளதா? தொடக்கத்தில் வீக்கத்தின் வடிவம், தோன்றியிருக்கும் இடம் முதலியன கேட்டறியவேண்டும். வலி குறிப்பிட்ட இடத்தில் உள்ளதா அல்லது பரவிய நிலை உள்ளதா? வலியின் தன்மை குத்தலாக உள்ளதா? அல்லது மந்த நிலையில் உள்ளதா? (குத்தல் வலி காணப்படின் சீழ் கோர்க்கும் நிலை எனப் பிரித்தறிதல் வேண்டும்; நன்மறவைக் கட்டி அல்லது நச்சு மறவைக் கட்டியில் வலி காணப்படுவதில்லை) புண்ணுகிய நிலை, பழுத்து அமுங்கும் நிலை, சீழ் கோர்த்த நிலை இவற்றில் எந்த நிலை முதலில் தோன்றியது எனக் கேட்டறியவேண்டும். கட்டி மறுபுரத்தில் ஒத்த நிலையில் உள்ளதா? உடம்பு இளைத்து வருகிறதா எனக் கேட்டறிய வேண்டும்.

### பார்வைத் தேர்வு:

கட்டியைத் தொடாமல் தானுக அசையும் தன்மை உள்ளதா? தனித்து இருக்கிறதா? அல்லது அடுத்தடுத்து கிளைத்திருக்கிறதா? உடலில் மத்திய கோட்டிற்கு அருகிலுள்ளதா? வடிவம் (நீளமானதா, மட்டமானதா, ஒழுங்கற்றதா) நிறம், மேற்பரப்பு, இருமலின் போது வீக்கத்தில் ஏற்படும் பிரதிபலிப்பு முதலியன பார்த்தறிதல் வேண்டும்.

### தொட்டுப் பார்த்தறிதல்:

உள்ளங்கையின் புறப்பகுதியால் கட்டியின் மேற்பகுதியின் உஷ்ண நிலையை தொட்டறிதல் வேண்டும். தொடும் பொழுது வலி ஏற்படுகிறதா? கட்டி எந்த அளவு ஆழ்ந்து பரவி உள்ளது? அதன் வடிவம், அதன்நிலை முதலியன அறிதல் வேண்டும். அதன் மேற்பகுதி வழவழப்பாக உள்ளதா? ஒழுங்கற்ற கடினத்துவம் உள்ளதா (நன் மறவைக்கட்டி) ஓரத்தின் வடிவம் முதலியன அறிதல்வேண்டும். சிறிது அழுத்தி மிருதுவாக இருக்கின்றதா (சீழ் கோர்த்த நிலை), நிலையாக இருக்கிறதா? கல் போன்று அழுத்தமாக இருக்கிறதா (நச்சு மறவைக் கட்டி) விரலால் அழுத்திப் பார்க்கும்பொழுது

விரலின் பதிவு உள்ளதா (நீர் கோர்த்த நிலை)? பின்னர் இருவிரல் கொண்டு அழுத்திப் பார்த்து கட்டியின் வடிவம், நிலை, அசையும் நிலை முதலியன அறிதல் வேண்டும்.

கட்டியில் ஒளி ஊடுருவும் நிலை, அழுத்தும்பொழுது கட்டி சுருங்கும் நிலை, இருமலின்போது ஏற்படும் பிரதிபலிப்பு, கட்டி தனித்து உள்ளதா? தோலுடன் சேர்ந்து உள்ளதா? பேசி, விசி, தசைநார், நாடி என்பு இவற்றுடன் தோலுடன் பதிந்து உள்ளதா? உள்ளங்கையால் சிறுது நேரம் கட்டியின் மேல் வைத்திருந்து நாடித்துடிப்பு தெரிகிறதா என அறிதல் வேண்டும்.

பின்னர் பிளவையிலிருந்து கசிவு வெளிப்படின் அவற்றின் தன்மை, அளவு, மணம், நீர் கலந்து கசிகிறதா, அழுகல் சதையுடன் வெளிப்படுகிறதா என அறிதல் வேண்டும்.

**கணிப்பு :**

கட்டியின் மேல் தோல் வீங்கி சிவந்து உஷ்ண நிலையுடன் தாங்கமுடியா வலியைக் கொண்டுள்ளது. பின்னர் மத்திய பாகம் மிருதுவாகி, வெடித்து ஒன்றுடன் ஒன்று தொடர்புள்ள பல துவாரங்கள் காணப்பட்டது. அதிக சீழ் வெளிப்படுதல், பின்னர் சாம்பல் நிறமான அழுகல் சதையுடன் கூடிய கசிவு வெளிப்படுதல், சுரம், குருதியில் வெண்விலங்கள் அதிகரித்தல், அமுரியில் இனிப்புச்சத்து காணப்படுதல், சக்தியற்ற நிலை, குருதியில் வந்தைகள் காணப்படுதல், முதலிய குறிகுணங்களைக் கொண்டுள்ளது.

**மருத்துவம் :**

மேகக்கட்டிகளுக்கு வெளி மருந்துகளை பற்றிட்டு உள்மருந்தும் வழங்குதல் வேண்டும். நீரிழிவுக்கான மருந்துகளும் வழங்குதல் வேண்டும். பின்னர் தேவைப்படின் அறுவை மருத்துவமும் செய்யலாம்.

**உள் மருத்துவம் :**

"வேர்பாரு தழைபாரு மிஞ்சினக்கால்
மெள்ள மெள்ள
பற்ப செந்தூரம் கொடுத்துப் பாரு"

என்ற வாக்கின்படி ஆவாரைக் குடிநீர், சீந்தில் சூரணம், நாவல் சூரணம், சந்தனச் சூரணம், இலவங்க லேகியம் இவற்றில் ஏதாவது ஒன்று வழங்குதல் வேண்டும்.

மேகாரித்தைலம் $\frac{1}{2}$ முதல் 1 பலம் நான்கு நாட்களுக்கு ஒருமுறை கொடுத்துப் பத்தியம் காத்துவர மேகக்கட்டிகள் விரைவில் ஆறி மேகநீரும் தூய்மையாகும்.

இந்நோயில் கேடடைந்த உடற்கட்டுகளை வன்மைப்படுத்தி பின்னர் நோய்க்கான மருத்துவம் செய்தல் வேண்டும். இரசத்தாது பாதிக்கப் பட்டிருப்பின் கந்தகத்தாலான கந்தக பற்பம், கந்தக இரசாயனம், கந்தகச் சுடர்த்தைலம் இவற்றில் ஏதாவது ஒன்றை சீந்தில் சூரணத்தில் வழங்குதல் வேண்டும். இரத்ததாது கேடடைந்திருப்பின் குருதியைப் பெருக்கக்கூடிய இரும்பு எஃகுகளால் ஆகிய பற்பச் செந்தூரங்களை நாவற்பழச் சாற்றில் கொடுத்தல் வேண்டும். மாமிசத் தாது கேடடைந்திருப்பின் வெள்ளி பற்பம் அல்லது வெள்ளிச் செந்தூரத்தை மணத்தக்காளிச் சூரணத்தில் வழங்குதல் வேண்டும். கொழுப்பு, என்புத்தாது கேடடைந்தபின் பொன்னலாகிய பற்பம், செந்தூரம், மாத்திரைகள் ஆகியவற்றையும், மூளை, தவளம் ஆகிய தாது கேடடைந்திருப்பின் காரீயம், செம்பு இவற்றால் முடிக்கப்பெற்ற பற்ப செந்தூரங்களை வழங்குதல் வேண்டும்.

**வெளி மருத்துவம் :**

சிறு கொப்புளங்கள் தோன்றிய பொழுது பெரிதாகாவண்ணம் அமிர்த வெண்ணெய், பச்சை எருவை, புங்குஎண்ணெய் இவற்றில் ஏதாவது ஒன்றைப் பூசி உலர்த்தல் வேண்டும். பருக்கள் தோன்றின் வெந்நீர் ஒற்றடமிட்டு அந்திமல்லி இலையில் எண்ணெய் பூசி அனலில் வெதுப்பி சூட்டுடன் கட்டவேண்டும். சீழ் கோர்த்துப் பெருகிய நிலையில் பிராயம்பட்டைப்பால், அத்திப்பால் இவைகளைக் கட்டியின் மேல் பற்றிடவும்.

கட்டியின் துவக்கநிலையில் வெண்பாடாண மெழுகைப் பற்றிட அழுந்திவிடும்.

முற்றிய நிலையில் உடையும். உடைந்தபின் கேடுற்ற சதையிருப்பின் அதை நீக்குவதற்குப் புங்குத் தைலம், இரண சஞ்சீவித் தைலம் அல்லது மெழுகுத் தைலத்தில் தேங்காய்எண்ணெய் கலந்து பற்றிடலாம். கிருமிகள் ஏற்பட்ட நிலையில் ஆடுதீண்டாப் பாளை எண்ணெயைப் பற்றிடின் கிருமிகளை நீக்கிச் சீழையும் வறட்டும்.

*பார்வை:*


1. சித்தர் அறுவை மருத்துவம்
2. சித்த மருத்துவம்
3. சித்த மருத்துவ நோய் நாடல் நோய் முதனுடல் திரட்டு
4. Clinical Methods in Surgery K. DAS.
5. Short Practice of Surgery
6. Pears Medical Encyclopedia
7. Text book of Medicine-Cecil, Loeb
8. Prices Text book of the Practice of Medicine
9. Text book of Medicine-Beeson
10. Harlow's Modern Surgery for Nurses.


---

## அமுத மொழிகள்

எல்லாக் கலையைவிட வாழ்வுக்கலை ஒன்றே மிகப்பெரியது.

உண்மை, அறிவு, ஆனந்தம் இம்மூன்றின் சொரூபமே ஆண்டவன்.

பிரார்த்தனையானது கடவுளுக்கு விடியற்காலத்தை திறக்கும் திறவுகோல்; சாயங்காலத்தைப் பூட்டும் சாவியும் அதுவே.

முதலில் அச்சத்தைப் போக்குங்கள்! பயப்படாதீர்கள்! ஐக்கியமாக, ஆனால் எப்போதும் அமைதியாகச் செயல் படுங்கள்!

சத்திய உபாசகனுக இருப்பதே மனித வாழ்வின் முக்கிய நோக்கம். சத்தியத்தைச் சுற்றியே மனிதனின் செயல்கள் யாவும் நடைபெற வேண்டும். தொகுப்பு K. குமரேசன்

# Sweet Competitions by Editorial Board



**Mr. Nanchil Nedumaran,** M. A.
" A few firing words against Varathatshanai"



Dancing by **"Dancer"** C. Subramanian



A. M. Joseph, B. Sc.
**"Thanks"**

# வர்மக்கலை மறைக்கப்படுவது—ஏன்?

அ. மரியஜோசப், பி. எஸ். ஸி., மூன்றும் ஆண்டு பி. ஐ. எம்.

"கல் தோன்றி மண்தோன்ருக் காலத்தே
—வாளொடு
முன்தோன்றி மூத்த குடி"

இத்தகைய தொன்மைவாய்ந்த தமிழ்க் குடி அன்றிருந்த நிலைக்கும், இன்று நிலவும் நிலைக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. அன்றைய தமிழன் ஞானியாகவும், யோகியாகவும், சித்தஞகவும்—ஓலை வடிவில் பல நூலைத் தந்து உலகிற்கே உயர்ந்த தத்துவ ஞானியாய் அறிவியல் நிபுணஞய் வரலாற்று ஆசிரியஞக மருத்துவ மேதையாகத் திகழ்ந்ததைப் பழைய இலக்கியங்களும், பழைய ஓலைச்சுவடிகளும், கைப்பிரதி நூல்களும், இன்னும் அச்சகத்துக்கு வராமல் ஏங்கும் பல ஓலைச்சுவடிகளும் எண்பிக்கின்றன.

அவற்றினின்று நாம் இதுவரை அறியாது ரகசியமாக வைக்கப்பட்டிருந்த பல கலைகளை ரசித்து, சிந்தித்து மகிழும் வாய்ப்பு கிடைக்கிறது. முக்கியமான கலைகள்—மருத்துவக்கலை, சோதிடக்கலை, மாந்திரீகக் கலை, மனோவசியக்கலை (மெஸ்மரிசம், கிப்ஞட்டிசம்) போன்றவையாகும். இவற்றில் **சோதிடம்** மக்களின் மனநோயைப் போக்கவும், **மருத்துவம்** மக்களின் உடல்நோயைப் போக்கவும் ஒருவாறு பயன்பட்டு வருதல் கண்கூடு. இவ்விரு கலைகளாலுமே கூடிய வரை மனிதன் நோய்கள் பூர்த்தி அடைவதால், மனிதன் மேற்கூறிய இதர கலைகளை முழு வளர்ச்சி அடையச் செய்யவில்லை—பயன்படுத்தவில்லை. இவற்றில் சில கலைகள் மறைத்து வைக்கப்பட்டும் வருகின்றன. குறிப்பாக—மாந்திரீகக் கலையும், வர்மக்கலையுமாகும்—முக்கிய காரணம் இக்கலையை மக்கள் அழிவு சக்திக்குப் பயன்படுத்தியதேயாகும்.

## சித்தர் கட்டளை

அன்றைய அறிவியல் மருத்துவ அறிஞர்களாகிய சித்தர்கள்—தாம் தோற்றுவித்த நூற்களின் குறிக்கோள்? ஏன் உண்டாக்கப் பட்டது? அதன் பயன் யாது? அவற்றைப் பயன்படுத்தப்படும் முறை யாது? என்பன போன்றவற்றை உணராது அடுத்தவரைப் பழி வாங்கவும், நயவஞ்சகச் செயல்களில் ஈடுபடவும் காரணமாக அமைந்துவிடும் என்ற அச்சத்திஞலோ என்னவோ அவர் தம் நூலில் சில வரைமுறைகளையும், இன்னவர்க்குத்தான் இந்நூல் ஈயப்படவேண்டும் என்பதான கட்டுப்பாடும்—அவ்வாறு செய்யத் தவறிஞல் வீண் பழி வருமென்றும் பலவாகக் கூறிப்போந்துள்ளதை உணரமுடியும்.

"வர்மக் கண்ணுடி" என்ற நூலின் தொடக்கத்தில் அறிஞர் கூறிய கருத்தை யான் இயம்புகின்றேன்.

"...ஆமேதான் வர்மத்தில் அனந்தநூல்தான்
அவரவரே சொல்லிவிட்டார் அவனிமீதில்
ஓமேதான் வெகுநூல்கள் ஆய்ந்து பார்த்து
உலகுதனில் இந்நூலை நன்னூலாக
வாமேதான் நல்லவர்க்கே யாகுமென்று
மறைத்துவிட்டோம் வெளியரங்கம்
ஆக்கிடாமல்
தீமேதான் வந்திடும் இந்நூல் கொடாதே
சிவசிவா இப்பெருமை செப்பலாமே".

எத்தகையோர்க்கு வர்ம நூலை வழங்கலாம் என்று பார்க்குமிடத்து படிப்படியாக உபதேசிப்பதை, கண்டிப்பதை, கட்டளையிடுவதனைச் சிந்திப்பீர்.

செப்புவதுக் கின்னுமொரு உபாயங்கேளு
சீசனென்று யாவருமே வருவானாகில்
தப்புகளே ஒன்றினிலும் இல்லாதானாய்
தன்னுயிர்போல் எவ்வுயிரும் கருதுவோனாய்
இப்புவியில் உன்மனதுக் கிணங்குவோனாய்
இருப்பவனேயானுக்கால் தெரிந்தெடுத்து
ஒப்பதுள்ள ஈராரு வருஷம் காத்து
ஒத்த பொருள் வாங்கி ஸ்தலம் (இடம்) காணிப்பாயே.

வர்மக்கலை தேர்ச்சியுற்ற பண்டிதனை "வர்மாணி" என்று அழைப்பர். அத்தகைய வர்மாணி எவ்வாறு எதிரியிடம் நடந்து கொள்ள வேண்டும் என்றும் மிகச் சிறப்பாகவும் குறிப்பாகவும் சுட்டுகிறார். ஆனால் தமிழன் தன்மான உணர்வு கொண்டோன் என்பதனையும் எண்பிக்கிறார் தம் நூலில்.

காணித்த தலமதனை வெளிவிடாமல்
காசினியில் உனக்கெதிரி யார்வந்தாலும்
நாணித்துப் பின் வாங்கும் நல்லோன் போலும்
நயவாக்கு நீ அவனுக்குரைத்துப் போட்டு
தோணித்து யெப்படியும் மகிழ்ந்து போற்றி
சுருதிசொல்லி நீபோக எதிர்பானாகில்
ஆணித்த முத்தென வரும் இந்நூல் மார்க்கம்
அப்பனே செய்யிலுயிர் அடங்கலாச்சே.

## ஆண்களுக்கு வர்மம் கொள்ளும் முறைமை :-

வர்மம் எவ்வாறு உடலைப் பாதிக்கின்றது; அதன் கொள்ளுமுறைமைதான் என்ன? என்று பார்ப்போமானால் ஆண்களுக்கும், பெண்களுக்கும் வித்தியாசப்படுவதனை உணரலாம். கொண்ட வர்மம் தன்னை இளக்குதற்கும் (மாற்றுதற்கும்) தனி முறைக் கூறிப் போந்துள்ளார்.

திண்ணமுடன் ஈடதுதான் கொள்ளு மார்க்கம்
செப்புகிறோம் அடியிடி கொள்ளலாலும்
வண்ணமுடம் கைச்சரசம் செய்ததாலும்
வழிதெரியா திடுக்கென கால்வைத்ததாலும்
என்னமுடன் முன்பின்னாய் சாடலாலும்
இதமறியா மோதி விழுந்தொடிதலாலும்
சண்ணுமப்பா வர்மநோய் பலதும் வந்து
சாருமே திடம் கெடுக்கும் விதம் பின் கேளே!

2. விதமாக ஓடலொடு சாடலாலும்
மெய்கெட்டுத் தடுமாறி விழுதலாலும்
பதமான மங்கையரைப் புணர்தலாலும்
பரிகரியிலேறி விழுந்தொடிதலாலும்
அதமான விக்கல் வந்து அமட்டிட்டாலும்
அயர்வோடு தலைச்சுமடு யெடுத்ததாலும்
குதமான சிலம்பு அடி வீச்சுக்குத்து
குளிப்பதிகம் மீறில் வர்மம் கொள்ளும் தானே.

## பெண்களுக்கு வர்மம் கொள்ளும் முறைமை :

பெண்டிருக்கு வர்மம் பல விதத்திலும் ஆண்களைப் போலவே ஏற்படினும் அவர்தாம் அஜாக்கிரதையினாலேயே அதிகம் விளைகிறது எனவும்; தன்னைவிட பலசாலியான ஆண்களுடன் "உடலுறவு" கொள்ளுவதால் கூட வர்மம் ஏற்றுவிடுகிறது. அவ்வாறு கருக்கொண்ட பெண்டிற்கு ஆகுமே என்றால் இளக்குமுறையும், மருந்தும். வேறு எனவும் விரிவாக கூறிச் செல்கிறார்.

கொள்ளவே ஸ்திரிகளுக்கு வர்மங் கொள்ளும்
கொள்கைதனை யின்னதென்று விவரிப் போம் பாரில்
விள்ளவே குனிந்து குடம் தண்ணீர் விம்மி
விரைவாக உன்னியே எடுத்ததாலும்
அள்ளவே தன் பெலத்துக் கதிகமான
ஆணழகன் தனைமருவ அணைத்தலாலும்
கிள்ளவே யிடையதுதான் பிரளளாலும்
கெடுத்தூல வர்மத்தில் குலைவதாமே.

2. குலையுமே கொட்டாவி யிடுதலாலும்
கொளுப்பயர்வில் கடுநடைகள் ஓட்டத்தாலும்
அணையுமே மதப்பட்டு சங்கையாலே
அணைந்துபிடி முறைப்படியும் கொள்ளலாலும்
கலையுமந்த தெசவாய்வில் பேதங்கொண்டு
கெற்பஸ்திரி பிரசவத்தில் முக்கலாலும்
துலையுமே சிசுக்கள்பெற விம்மலாலும்
சுழன்று பைமாறில் வர்மநீரேழிவதாமே.

இவ்வாறான சிறப்புமிக்கக் கலையில்; வர்மம்கொண்டால் அறிகின்ற முறையை பலகூறி அவற்றில் சிறப்பாக "வர்மநாடி" யும் கூறிப்போந்துள்ளனர்.

பார்க்கவே வர்மத்தின் நாடிகாண
பகருவோம்
குருநாடி பழகித்தேர்ந்து தேர்க்கவே
வாதபித்த
சேத்துமத்தின்நாடி தெளிவாக சமதாதின்
நடையுங்கண்டு வார்க்கவே
மெயிப்பரீச்சை
நிலையுமாய்ந்து மகிமையுள்ள
பிறக்குறியின்
கருத்தும் பார்த்து கார்க்கவே
குருமுறையாயித்
தெளிந்துதேறி காசினியில் வர்மநோயி
மாறக்கேளே.

**வாதவர்மநாடி:**

மாற்றுவதுக் கின்னுமொரு வரிசைகேளு
மகிமையாயி வலக்கரத்தில் நெட்டிவாங்கி
ஆற்றுவது மூவிரலால் சுழற்றிப் பார்க்க
அய்யனே வாதமது பதுங்கிநின்று
யேறவே கலந்து ஒரு நாடிதானும்
எழும்பியே யிருக்கையும் ஒருப்போல்
நின்றால்
தூற்றவே வாதவர்ம மெனவே தோன்றும்
தொல்புவியில் மருந்து செய்யத்
துணிகுவாயே

**பித்தவர்மநாடி:**

துணியவே பித்தத்தின் நாடிதானும்
துச்சமாயி மாத்திரைக் குள்ளடங்கிநின்று
அளியவே வாதசிலேத்துமத்திலொன்று
அப்படியே அளவுவிட்டு யேறிஓடில்
பணியவே இருகரமும் ஒருபோலாகில்
பண்பான பித்தவர்மம் யெனவுள்க்
கொண்டு
தணியவே சிலிசைகள் காலகாலம்
தக்கபடி செயிதிடுகில் தவறும்நோயே.

**சேத்தும வர்மநாடி:**

நோயான சேத்துமத்தின் நாடிதானும்
நுண்மையதில் அடங்கியது பதுங்கிநின்று
தாயான வாதத்தின் நாடிதானும்
தணியாமல் விசுக்கெனவே நடைதான்
விம்மி
தீயானி பித்தத்தின் நாடிதானும்
திடங்கெட்டு மடங்கிடுகில் சேத்தும வர்மம்
பாயான கைக்குள்ளிது அடங்கிடாது
பறையடிநீ மரணமெனப் பரிந்தவாறே.

ஆகவே சாத்திய அசாத்திய நாடி யறிந்து மருந்து செய்முறைமையையும், நோயின் நிலைமையையும் தெளிவாக எடுத்துக் காட்டும் நூலாகவும் அமைந்த வர்மகண்ணாடி எனும் இந்நூல் "நாடியை" இத்துடன் விட்டுச்செல்ல வில்லை. படுவர்ம நாடி, தொடுவர்ம நாடி என்று இவ்வாறே அடுக்கிச் செல்லும் அளவுக்கு எடுத்து இயம்புகின்றது.

வர்மம் கொண்ட முறைமை அறிந்த நம்மவர்க்கு பேரறிவுமிக்க சித்தர் தம் தெள்ளிய அறிவால் மருந்தும் உரைத்தமை காணலாம். பல அரியவகை, முறைசெய் பாகங்கள், அளவு முதலியன தெளிவாக கூறப்பட்ட இந்நூலில் முக்கியமாகக்கூறிய பொதுமருந்தொன்றைக் காண்போம்.

**குக்குடாதி நெய்:**

1. விள்ளுவோம் குக்குடாதி நெய்தான்பாரில்
விதமான மனுக்களுக்கு வர்மம் நீங்கி
துள்ளவே குக்குடமும் உடும்பு கம்பான்
துயலான முயலோடு கொழுத்ததெல்லாம்
தள்ளவே யிவை வருந்தி குடலுகால்கள்
சார்ந்ததொரு முடிபிதுகளும்
நீக்கிப்போட்டு
அள்ளவே சதைத்ததனை
யெடுத்துக்கொண்டு
அழகான எண்குறுணி நீரிலிட்டே.

2. யிட்டுமே யெட்டொன்றாய் வற்றக்காய்ச்சி
இதமான சதாவேலி கறுத்த சுண்டை
மாடாக செங்கள்னீர் கிழங்கினோடு
மாதளையின் கருஞ்சூரை நாகப்பட்டை
காடாக கொடுவேலி, வில்லை, சில்லரி
கனமான செஞ்சட்டி' செருப்படிவேர்
செட்டாகக் குறுத்தொட்டி தூதளைவேர்
சேர்ந்த கடராடி (நாவிரிக்கருது)வேர்
ஆடதோடை.

3. தோடைவேர் பனைவேரு கமுகன்வேரும்
சுழிவான தெங்கின்வேர் கண்டங்கத்திரி
நீட்டவே பாடைதாளி ஏறளஞ்சி
நிலப்பனையின்
கிழங்குடனே சுண்டை தக்காளி
கூடவே உளிஞ்ஞைவேர் அறுகன்வேரும்
குணமான நன்றியொடு தாருவேரும்
ஆடவே சீந்தியொடு முத்தக்காசும்
அடபொதியன் கிழங்கினோடு தாங்கியாமே

4. ஆமப்பா கெருடக்கொடி பூவரசின்பட்டை
அடைவாக வகையொன்று பலமே மூன்று
நாமப்பா சதைத்துத் தறித் தெடுத்து
வைத்து
நலமான தாளிதனில் வாரிப்போட்டு
ஓமப்பா எண்குறுணித் தண்ணீர்விட்டு
உத்தமனே அடுப்பேற்றி
யெட்டொன்றுக்கி
வேமப்பா வேலீயொடு பூவன் குறத்தி
விதமான பெருந்தும் பைபூடோலமாமே.

5. ஆமப்பா கொடுப்பையொடு எழுத்தாணி
வாடி
அழகான கையானும் சித்திரப்பாலை
நாமப்பா இசங்கிஞெடு பொன்னுவரையும்
நாயகனே கீழ்க்காயின் நெல்லிதானும்
ஓமப்பா வல்லாரை விஷ்ணகிருந்தி
உத்தமனே குடங்கலொடு
மொசுமொசுக்கைமேனி
போமப்பா வேலியுடன் பருத்தி மாதலை
பொருந்தவே சாறெுன்று பலிகால்வாங்கே.

6. வாங்கியே ஆவின்நெய் படிகான்நாலு
வளமான புதுத்தேன் அரையேயாகும்
தாங்கியே கற்கவகை சாற்றக்கேளு
சாதிக்காய் பத்திரியு கிரும்பு சீரம்
ஓங்கியே கசகசா அர்சியாறு உற்றசுக்கு
ஏலமொடு வசம்பு மஞ்சள் சேர்ந்த
கந்தம் முந்திரிகை பேரீத்தும் பாரே.

7. பார்க்கவே அவியஞெடு கொம்பரக்கு
பண்பான கோதும்புவகை யொன்றுக்கு
சேர்க்கவே இருகழஞ்சாய் வாங்கிவந்து
சேர்ந்த பழம் அவின் நீக்கித் தூளதாக்கி
சேர்க்கவே ஈருள்ளி வெள்ள வெண்காயம்
இசலாகச் செந்தெங்கு இளநீர்வேரும்
ஆர்க்கவே கஸ்தூரி புனுகு பூரம்
அடர்ந்த சட்டம் குங்குமப்பூ
கோரோசினையும்வாங்கே.

8. வாங்கியே இவையொன்று கழஞ்சி
யொன்றும்
மகத்தான பாகமதை வகுக்கக்கேளு
தாங்கியே உருளிதனில் சார்தான் வீத்தி
தற்ருனர் சீர்பாதம் சிரசிலேந்தி
ஓங்கியே குருபாதத்தை உள்ளில் வைத்து
உற்றசார் அடுப்பேற்றி அனலை மூட்டி
தேங்கியே கழாயம் ரண்டும் வெவ்வேருக
திடமாகத்தான் விட்டு பின்னுங் கேளே.

9. பின்னுமே கொதித்துவரும் போதிலேதான்
யிசல்வாக நெய்யைவிட்டு இளநீர் சாருல்
அன்னமே கற்கவகை அரைத்துப் போட்டு
அடுத்துக் கிண்டி மூன்றும் நாள்
வடிக்கும்போது
முன்னமே யுரைத்த கஸ்த்தூரியோடு
முதச்சரக்கும் பொடித்துக் கலசத்திலிட்டு
யின்னுமே சிவன்பாதம் நெஞ்சில் வைத்து
இசைந்தந்த பதங்கண்டு தேனும்வீத்தே.

10. வீத்தியே முதிராமல் வடித்துக்கொண்டு
விதமாகத்தான் பொதிந்து வாரம் சென்ருல்
போற்றியே கறண்டியிடை உள்ளுக்கீய்ந்து
புகழ்பெறவே யிருவேளை ஈராற்
நாள்த்தான்
சாற்றியேதான் குடித்துப்பத்தியம் பின்னும்
சாற்றுகிரேும் விலக்கான பதார்த்தம் நீக்கி
யேற்றியே மங்கையரைப் புணர்ந்திடாமல்
இசவான வெள்ளாட்டின் மாமிசமே

**தீரும் நோய்கள்:**

11. ஆமப்பா யிந்நெய்யை அருந்திப் பின்னுல்
அறைந்த குறுந்தொட்டி எண்ணை
முழுகும்போது
நாமப்பா தீருகிற வர்ம நோயை
நாட்டுகிரேும்
வெகு சிறுக்காய் நயந்து கேளு
ஓமப்பா சயமோடு, யிருமல், ஈளை
உற்றதொரு கொழுத்து முதல், நீரெழிவு,
வாய்வு,
நாமப்பா வறச்சை, வலி, பித்தகோபம்,
நலங்கெட்ட சள்ளுவர்மம் அனைத்தும்
போச்சே

12. போச்சுதே வாதபித்த சிலேற்பனத்தாலும்
பூண்டெழுந்த வர்மமெல்லாம் போச்சு
போச்சு
வாச்சுதே தொடுவர்மத் தடங்கலெல்லாம்
மாறிவிடும் நெயினுட வலுமை மெத்த
வீச்சுதே தீராத வர்மமெல்லாம்
வேறெயொரு மருந்து செயிது தீர்ப்பாரு
முண்டோ
ஆச்சுதே சொன்ன நோய் மட்டுமல்லா
அப்பனே அனந்தநோய் தீரும்பாரே.

அரும்பெரும் மருந்து சொன்ன சித்தர் இக்கலையை மறைக்கவில்லை; நல்லவர்க்கே யாகுமென்றனர். ஆனுல் ஓர் உண்மையைப் புரிந்துகொள்ளவேண்டும் “வணங்காமுடி” என்ற பெருநூலில் (சத்திரியர் வம்சத்தின் வரலாறு கூறும் நூல்) இக்கலையானது

சத்திரியரைக் காத்துக்கொள்ளும் பொருட்டு சத்திரிய வம்சச் சித்தனும் அகஸ்தியனுரால் உண்டாக்கப்பட்டது என வரலாறு கூறுவார், வரலாற்றைத்தர மறுக்கின்றனர். ஆனுல் அவர்தம் வீட்டின் கதவு திறந்தே உள்ளது எப்போதும் அங்கு சென்று வாசித்துப்பார்க்க அனுமதி உண்டு.

மர்மக்கலையாம் வர்மக்கலை மறைக்கப் பட்ட காரணம் நன்மனம், பரந்தமனம், திறந்தமனம் படைத்தோர் குறுகியதே எனக் கூறிக் கட்டுரையில் அமைந்த சில பயனுள்ள குறிப்பிட்ட பாகங்களையாவது தந்து ஓர் உன்னத கலையாம் வர்மக்கலை பற்றி சிறிது தெரிந்தோர்க்கு இன்னும் சிறிது அதிகமாக தெரிந்து பயன்பெறவும், சிறப்பான மருந்து முறை ஒன்றும் கொடுத்து என் முயற்சிக்கு உதவிய பரந்த உள்ளம், உத்தமர் எலியாஸ் ஆசானுக்கு என் நன்றி உரித்தாகுக.


கட்டுரைக்கு உதவிய சுவடிகள்:

1. வர்ம நூல்
2. வர்ம அறம்
3. வர்ம கண்ணுடி 500
4. வர்ம ஞானம்
5. வர்ம ரெத்தினம்
6. வர்ம பீரங்கி
7. வர்ம ஒடுக்கி
8. வர்ம கண்டி
9. வர்ம சிங்கி
10. நாலு மாத்திரை
11. பொன்னூசி
12. ஓடிவு முறிவு சாரி
13. படுவர்ம நிதானம்
14. தொடுவர்ம நிதானம்
15. வர்ம சூத்திரம்
16. வர்ம சூக்ஷம்
17. பஞ்ச பஷி அடங்கல்
18. வர்ம குடோரி
19. வர்ம ஒளி பாகம் I
20. வர்ம ஒளி பாகம் II


---

குறிப்பு: மூல ஏடுகளில் "வர்மம்" என்ற சொல்லாட்சி "வற்மம்" என்றே கையாளப்பட்டிருக்கின்றது என்பது குறிப்பிடத்தக்கது.

— A. M. Joseph



# பொதிகைத் திருமுனி அருளிச்செய்த பாலவாதம்-நூல்

1. சீரணி முருகன்பாதம் திருவடி தொழுதுகொண்டு
   பாரணி முலையாள்பெற்ற பாலகர் வாதமெட்டும்
   ஆரணி அசாத்திய சாத்தியம் அவுசதம் செய்பாகங்கள்
   காரணமாகத்தானே கன்றின நூலைச்சொல்வோம்.

2. சொல்லிய பாலர்வாதம் தொடர்ந்திடும் விவரம்தானும்
   மெல்லியாள் கருவில்வந்து விரும்பியே தசவாயுக்கள்
   நல்லியல் இல்லாமல்தான் நாதமும் சேருமாகில்
   தல்லியே குணமும்விட்டு தகர்ந்திடும் நரம்புதானே.

3. தந்தையும், தாயும்கூடி தழுவியே புணரும்நாளில்
   வந்துமுன் செய்ததோடம் மருவிய கெற்பக்கூட்டில்
   விந்தையார் சரத்தினூடே வெண்குழல் ஓட்டம்போலே
   அந்ததாள் உறுப்பைத்தொட்டு அடர்ந்திடுமென்னலாமே.

4. ஆம் என்ற சுரத்தின்வாதம் அக்கினிவாதத்தோடு
   ஓம் என்ற மூலவாதம் உணங்கிய வாதந்தானும்
   தாம் எனும் அதிசாரவாதம் தகறுமேல் மூச்சுவாதம்
   போம் என்ற விதையில்வாதம் பொருத்துவாதங்களெட்டே.

5. எட்டு வாதங்கள் தன்னில் இயல்புறு சாத்தியம்அசாத்தியம்
   இட்டமாம் சுரத்திவாதம் இசைந்த அக்கினியின்வாதம்
   விட்டுறு மூலவாதம் விரையில்வாதங்கள் நாலுந்
   தீட்டற தீருஞ்சாத்தியம் தீராது உணக்கல்வாதம்.

6. வாதமே பொருத்துவாதம் வருகுமேல் மூச்சுவாதம்
   சீதமே அதிசாரத்தில் செப்பியவாதம் நாலும்
   கோதற தீர்ந்திடாது கொடும்பிணி அசாத்தியமாகும்
   தீதற பொதிகைவாழும் திருமுனி அருளிச்செய்தார்.

**சுரவாதத்தின் குணம்**

7. குத்திடும் அங்கமெல்லாம் கொடுஞ்சுரம் கோபமாகி
   சுத்திடும் உதரத்துள்ளே சுழன்றுபோய் வாந்தியுண்டாம்
   இத்திடும் மலமிடாது இடுப்பொடு பாதம்தன்னில்
   வத்தியபாலர் மெய்யில் வரும்சுரவாதம் தானே.

**சுரவாதத்திற்கு மருந்து**

8. காணவே நிம்பப்பட்டை கடலாடி, இசங்கன்வேரும்
   பூணவே திரிகடுகு, புங்கன்வேர், ஆயில்யத்தோல்
   காணவே தழுதாழைவேரும், கருஞ்சூரி, கருவிலாஞ்சி
   நாணவே சித்தமுட்டி நவில்வகை பலங்களாமே.

**அத்தனூஸ்** வைத்தியரிடமிருந்து அ. மரியஜோசப், B. Sc., III B. I. M. மாணவரால் பெறப்பட்டு வெளியிடப்படுகிறது.

9. பலமது தனக்கு இரண்டுபடி குறையாமல்தான்
ஜலமது அளந்துவிட்டு சேரவே எட்டொன்ருக்கி
நலமுறும் நிம்பஎண்ணெய், நல்ல ஏறண்டஎண்ணெய்
கலமதில் உரிவீதம்தான் கனலி வெள்ளறுகுமஞ்சள்

10. மஞ்சள் சிற்றரத்தைக் காயம், வசம்பு,வெள்ளுள்ளி,சீரம்
உருகுவால்மிளகு, வெந்தயம், உழுந்து ஒருகழஞ்சிவீதம்
மிஞ்சவே கலந்துகாய்ச்சி மெழுகுபதம் வடித்துக்கொண்டு
அஞ்சவோர் கரண்டிவீதம் அருந்தியே துவாலைபோடே.

11. போட்டிடு முழுகுவென்னீர் பத்தியாய் பத்தியத்தை
நீட்டியே காக்கும்போது நில்லாது சுரத்தின்வாதம்
கட்டிடும் வேத்துநீரில் காஞ்சிர இலையும்சேரு
ஓட்டிடும் ஒன்றைவிட்டு ஒன்றுநாள் ஆகலாமே.

## அக்கினிவாதத்தின் குணம்

12. எரிந்திடும் தேகமெல்லாம் இருமலும், செருமலுண்டாம்
பெருத்திடும் சிரங்குண்டாகும் பேய்முளி முழிக்கும்பிள்ளை
அரிந்திடும் முடங்கும் கைகால் அன்னைபால்உண்ணமாட்டார்
சிரித்திடும் எரிப்புண்டாகும் சில்லூற்போல் சத்தமாமே.

## அக்கினி வாதம்தீர தைலம்

13. சத்தான தோடையிலே நிம்பப்பட்டை, சதாவேலி,
கிழங்கு இலைதான், கையான், முத்தான், வெள்ளறுகு,
சீந்திற்தண்டு, மூங்கிலிலை, கருவீழி, அம்மான்பச்சை,
சித்தான நறுகரந்தைச் சாறுநாழி
சிற்றேறண்டண்ணெய் உரி, நெய் உழக்கு
வித்தான தேங்காய் எண்ணெய், நிம்பஎண்ணெய்
வீதம் அரைப்படி அரைக்கால் விரும்பிச்சேரு.

14. விருப்பமுள்ள திரிகடுகு, திரிபலாதி, வெந்தையும்
இருசீரம், கச்சோலம், சந்தணஞ்
சிருப்பமுள்ள கிருசாத்து, வங்கம், ஏலம்
சிங்கிவால் திரிசாதி, வால்மிளகு, மஞ்சள்
உருப்பமுள்ள வகைகழஞ்சு சாற்ருலாட்டி
உத்தமனே எண்ணெயிலே கலந்து காய்ச்சி
அருப்பமுள்ள மெழுகுபதம் வடித்துத் தேய்க்க
அக்கினியின் வாதமது அகன்றுபோமே.

## மூலவாதத்தின் குணம்

15. வருமலா குழலினலே, மைந்தர்மேல் திமிருண்டாகி
பொருமலும், மலமிடாது புக்கிடும் அங்கந்தன்னில்
செருமலும் வியர்வையாகி சேரவே, குளிர்ந்துகாட்டி
வெருவியே எட்டாந்நாளில் விட்டிடும் காலில்சேரும்.

16. காலது இரண்டிலுந்தான் கருதியே முடக்கமுண்டாம்,
தூலமும் குறைந்துவாடும், தூளமுலை விருப்பமில்லை,
பாலவே முகமும் கண்ணும் மஞ்சள்போல் நிறமும் தோன்றி
சாலவே மூலவாதந் தன்மையாய்ச் சார்ந்தவாறே.

**மூலவாதம் தீர கியாழம்**

17. திரிகடுகு அரிசியாலும், சீரகம் கெருடபச்சை
வழுதலை அருளிவேரும், மாயக்காய், கருவிலாஞ்சி
பெரிய வெள்ளறுகுங் கூளை பேணியே கழாயமிட்டு
சிறியவர் தனக்கு ஊட்ட தீர்ந்திடும் மூலவாதம்.

**விதை வாதத்தின் குணம்**

18. வித்தொரு பாலில்தோன்றி, வீக்கமும் குத்துமுண்டாகி
சுத்தியே குடல்வலித்து சுருட்டி மெலிபூத்து வாங்கும்
தெற்றிடும் இருகால் ஓயும், திருந்திடாத சவைக்குன்றும்
கத்தவம்போலே சத்தம் கதறிடும் பாலன்தானே.

**விதை வாதம் தீர—நெய்**

19. முதியார்க்கூந்தல், முடக்கொத்தான், மூக்கற சாரணை
பதியும் குப்பைமேனியிலை தைவளையும் பலமிரண்டுதான் சதைத்து
குறியும்பாணி குறுணியதில் குறுகக் காய்ச்சி நாளொன்றுய்
விதியின்படியே வடிகட்டி மிகதேங்காயிது ரெண்டே.

20. இரண்டு தேங்காய்தான் திருகி இறுத்துக் கழாயம்தனில் புளிந்து
கண்டெரெண்டும் எண்ணெய்படி, கழஞ்சி பருப்பு, திரிகடுகு
பண்டை ஏலம் அயமோதம் பகரும்—வகைத்து விராகன் ஐந்து
கொண்டே காய்ச்சி பதம் வடித்து குறியக் கறண்டியளவாமே.

21. மூன்றுநாள் அந்தி சந்தி முறையுன் பாலர்கூட்ட
குன்றுமே விதையில் வாதம் கொழுத்திடும் பண்டைவாதம்
தென்றிடும் ஆனந்தவாயு சுளுக்குடன் வீக்கந்தானும்
இன்றுமே விசனந்தீரும் இம்முறையுரைத்தார் மேலோர்.

**உணக்கல் வாதத்தின் குணம்**

22. உரைத்திடும் கையும் காலும் உறுப்பெல்லாம் தளர்ச்சைகாட்டி
நீர்ப்புறு கழுத்துங்கோணும், நீர்மலம் சேர்ந்துகொள்ளும்
துரத்திடும் சீதம் வேர்வை துவள்முலை விருப்பமில்லை,
அரைத்திடும் பாவைபோலே அடங்கலும் உணக்கலாமே.

**உணக்கல் வாதம் தீர தைலம்**

23. ஆவின்நெய், நிம்பஎண்ணெய், ஆமணக்கு எண்ணெய்,
நல்லெண்ணெய்
மேவும் தேங்காய் எண்ணெயுடன் மிக்க வகைக்கு ஓர் உழக்கு
தாவுங் கொழுவேல் சீரமுட்டி, தழுதாளைவேரு, நன்னரி
கூவும் இசங்கு, நறுந்தாளி, கோரங்கிழங்கு, பலநரத்தை.

24. பலந்தான் ஒன்று இருபடி நீர் பரிவாய் அறுத்து எட்டொன்றுய்
குலையாங் கற்க கஞ்சின பாகுக்கில் வெந்தயம் முக்கடுகு
இலா மாந்தேக்கு, வசம்பித்து, பின்னும் கட்டிசனிருயும்
இலங்கு மஞ்சள், கருஞ்சூரை இதுவே வகைக்கு ஒரு கழஞ்சே.

25. ஒன்று இடித்துப் பொடியாக்கி உகந்த கழாயமிட்டரைத்து
நன்றுய் எண்ணெய்தனில் கலந்து நாளேள் மூன்று வன்னியிட்டு
சென்றல் கடுகுபதம் வடித்துச் சிறிய கரண்டி அளவாக
அன்றுமல் தான் நாள் மூன்று ஆறுநேரம் உட்கொள்ளே.

26. கொள்ளே கொண்டு மேல்பூசி உதகம் எட்டுக்கி அளந்திட்டு
மெள்ள காய்ச்சி வைத்துவிடு, மேவும் பக்தியும் அன்னைக்கு
தள்ளையாருக்கு பிள்ளைக்கும் தயவாய்ப் பார்த்து வருவீனல்
கன்ன உனக்கல் வாதமது கர்மநிவர்த்தியால் போமே.

**பொருத்து வாதத்தின் குணம்**

27. தளர்ந்திடும் முடம் உண்டாகும் தந்தைதாய் செய்ததோடம்
அகன்றிடும் கற்பதானம் அடுக்கினில் தந்தபாவம்
வளர்ந்திடும் பஞ்சபூதம் வரும்தெச வாய்ப்புனலே
உகன்றிடும் மருந்தேருது உடையவன் அருளிச்செய்தார்.

**மேல்மூச்சு வாதத்தின் குணம்**

28. வருந்திய பாலர் மெய்யில் வசங்கெடும் கையும் காலும்
தீருமே அசைவுருது, தேகமும் குளிர்ச்சையாகி
விரும்பியே விசைதளரும், விறைத்திடும் கழுத்தும் கோணும்
நிரம்பிய சருதி குன்றும் நிலைதளர்ந்து ஊனிடாதே.

**மேல்மூச்சு வாதம் தீர தைலம்**

29. ஊணவே நிம்ப எண்ணெய் உரியதை அளந்துவிட்டு
வேணுமே மரக்கொடியின் வெற்றிலைச்சாறு உரிதான்
தோணவே பழுக்காய்ப் பாக்குத்தோல் களைந்தொரு பலத்தை
நாணுமே சாற்றைவிட்டு நலம்பெற அரைத்திடாயே.

30. அரைத்து நீகரைத்துக் காச்சி அன்புடன் வடித்துக்கொண்டு
சிரத்தினில் கரத்தை வைத்து சிவனருள் மனத்திலுள்ளி
உரைத்திட காசு வீதம் உட்கொண்டு மேலும் பூசு
துரத்திடும் பாலவாதம் துகளும் மேல்மூச்சும் போமே.

**அதிசார வாதத்தின் குணம்**

31. வசையதுகெடும், கைகாலும் வளைந்திடும் குளைந்துபோகும்
கசங்கியே வயறெரிந்து கழிச்சலும் பொருமலாகி
விசம்பெறும் குளிர்ச்சையுண்டாம், விக்கலும், பிணியும் காட்டும்
மசங்கியே போதக்கேடாம் அதிசாரவாதமென்றே.

**அதிசார வாதம் தீர தைலம்**

32. தைலம் என்னவே சாதிலிங்கம், ஈரசெனந்திரியிதூட்டி
நன்மையாங் நின்ப எண்ணெய் நறுநெய்யும் சமனதாக
வண்ணமாய் எரித்து வாங்கி வயசளவறிந்து தாக்கி
அன்னமே செறுதேனோடு உண் அதிசாரவாதம் போமே.

## பாலவாதம் எல்லாத்துக்கும் பொது மருந்து

**தைலம் 1**

33. பாலகர் வாதம் எட்டும் பறந்திட தயிலம் ஒன்று
சாலவே சென்னகரை, சதகுப்பை பலவும் நான்கு
ஏலவே குறுணிநீர் இடத்ததை விட்டுக் காய்ச்சி
நாலில் இரண்டானபோது நலமுடன் இறுத்து வாங்கே.

34. இறுத்திட நின்பளண்ணெய் நாழி இனியதோர் பசுவின்பாலும்
மறுத்தது சமனுய் கொண்டு வசம்பு ஒருபலம்தான் வாங்கி
குறித்திடும் கிழாயத்தோடு குழப்பவே கலக்கிக் காச்சி
இறுத்ததை அரித்து நன்ருய் செறுவர் மேல் பூசுபூசே.

35. பூசிடும் பாலகர்மேல் பொருந்திய வாதம் எட்டும்
பேசிடாதோடும் கண்டாய் பிறப்பினில் வந்ததோழம்
வாசகம் அறிந்து நல்ல வையகம் எல்லாம் கண்டு
நாயகனுமைத்துச் சொன்னுர் நானிலமறிந்தானே.

## தைலம் II

36. **களிப்பு :-** இளநீர், பாக்கு, வெற்றிலையும், இசைந்தபிச்சி
மருக்கொழுந்து,
இளநீர், வெல்லம், சாநயம், கறி, பொரி மிளகு, சந்தனம்
வளநீரிஞ்சுள்ள காரம் மாவாலுறுவு மரப்பிள்ளை
குளநீரருகில் குஞ்சாவல் கொட்டைத்தட்டு கோத்திரியே.

37. திரியும் பச்சை அரிசியுடன் தேங்காய் பண்டம்
திறிசுவடாய் நெருங்கச் செய்யும், கிரிகையிது நெடுநாள்
வந்தபிணிதீரும் தெரிய ஏழை கன்னியிடு தேவிபாதம் திருவடிசெய்
அரிய பிணியும்தான் தீரும் குறுமுனிதாம் அருளுவதாம்.

38. அருளிடும் பலநூலாய்ந்து அவுழ்தம் செய்யலாகும்
பொருள்தரு நிலையறிந்து நல்ல போசன்தியல்பு கண்டு
மருவியே தேகங்கண்டு மருந்துகள் விழவுந்திறந்து
குருவருள் மனசில் வைத்து கொடுத்திடில் பிணியொன்றுமில்லை.

---





# SPORTS FLASHES

Mr. Ponnuthurai M. A.
Principal, St. John's College.
*Chief Guest*



"Relay without delay"



Aiming the point by Arrow "Javelin".
Nithiyanantham, II B. I. M.



V. Stanley Jones, B. A. II B. I. M.
Winning the 400 metres race.



"Shotput"
Annathai, Final B. I. M.



"Discus in action"
G. Jayakumar [ M. D. (Siddha) ]
I-st year



# Sidh-Agasthier and Theraier

Main theme from, "BHOGAR 7000"

This poems written with the Siddha Science descriptive imagination by

**N. Anandhapadmanabhan; III B. I. M.**

**Podhigaihill:**

Podhigai — a hill of India's south,
A greeney fallsy mountain of south,
He the holy superior than other hills
By the ever stay of a Siddha Saint!
Greeney sight of fine five falls
Herbel smelling sweet honey falls,
Grayesh trees reaches as falls
By thy weight of coloured balls!

**Nature:**

Cloudy sky with dimmi cloured
Hazy mists covers the hills!
Now falling fluids are rainey drops!
Listen! thy voice of drunkered beas (and beatles)
Hark! the drumming share is watery falls
Shadow dance of Sandal trees
O Look her dance of twisting style
And **sexey dance of Siddha plants!**
Audiencey monkies wandering there.

**'Thamilz':**

Beneath, the tree of cooling neem roof
By crowded trees of smelling Sandals
Sweety 'Thami z' and 'Siddha Science'
Salutary breaze takes to lands!
All by thee "Agasthiya Saint'
King of saints with a keeney sight!

**Agasthier:**

A Pygmy figure with bulkey belley
The style of hair like a banian props
His supreme brain in 'Siddha Science'
No man who can able to say?
Yoging there of Ugas and Ygas,
His yogic power flaming there!

**Kings head ache:**

Maharajan — named a king of south
Who was full of sad and sad
By thy aching head of twelve years,
There no physician made relief
They lastly advised to call our saint

**'Gurugulam':**

Beneath the green tree, beded by the golden flowers
Where our 'Siddha Schooling' with five students,
A female body lies thy bed of banana barkes
Siddha Saint squzed some leafijews to her nose,
So she regained her sense 'Cobra Toxin' fly away!
Her kins men's paleded face began to smile — now!
One more human lies nearer to saint,
Lion hearted students' 'eagle look'
Now saint showed 'Choondodhirivarmam''
He pinned his finger between the bodies thumb and next
Yet the lean body awakened with no smiles
Because of their daily class — thence ended.

**Minister's call:**

Yence the Siddha varma class ended,
Thence the minister of fore toled king
Came there in a horsed chariot,
Worshipped him by embrasing the land
All the students wished him and distanted.
Newly commer said about his sad
Of his kings 'Ever aching head' of a long,
And closely requests to our saint;
Siddha saint called a name — a student came
"O student arrange the 'Medical kit'
And set the surgery weapons in it as usual!"

**Karani herbs :**

In a short time, came there a siddha student
With a "Medical kit" and "Surgical Box"

Student plucked some rare karani herbs.
And bundled in a banana bark, for ever green!
Charret flied with caller, saint and student!

**Journey to land :**

After a long journey, it entered the fort gate
Royal palace with fine receiving ministers
Welcomes in a sad'y sigh and showed thy bed.
Siddha saint saw the patient's ill.
Whence he sadly said about his paining head of past twelve years.

**Diagnosis and Prognosis :**

Siddha saints uniques power of brain showed
Why thy king lies and wories — Saint came to the end.
A 'Therai' presence in the frontal head, it gone there
By the uasel way before the days of pain
So he concluded to arrange for operation.
Surgical student arranged all to open the skull.

**Anaestheties :**

Now our Siddha man began to do,
Saint punched him some varmas and
'Sammolini' leaf jews for anaesthetie
(Cannabis fumes used as anaesthetie)
(Medical wines also used in ancient times)

**Operation :**

Surgeon cleaned and incised the skin,
And desected the kabala mutpesi by a scalpel
Lastly they saw a 'Therai' between the branch
Of 'mummuginerve' like as a tumour shaped on brain!

**Removel of Therai :**

For remove the creature from the brain
Saint used a 'korada' — whence the student said
Removing by it is a dangerous one, so
An idia 'by water's garulous and odour,
Creature will jumped — to watery bowel'
Siddh accapted and proceeded his (idea) nearer
Therai jumped to the wavey watery vessel in a roling style!

**Operation success :**

Siddha surgeon succeeded as usual,
And thy affix 'the skull and muscles'
By appeling Salya Karani — juices — and
Lastly fusion the skin by a medical cream
Student bandaged thy skulley head!
Finally saint attained very gay
He praised thy student and embraced
And gratificate him called as "Theraiyer"!
"Theraiyer!" — in the top of joy!
And told him medical 'secrets' and Rasavadhas
After some time saint reduced the varmam
By pointing the particular spot and applied
The 'Sanjivani herb' to restore sence
The king a wakened by the leafy juices
All his pains and strains fly away

**Patients joy :**

Now the king realised his absencey headache
'Joy and joy' Royal gay never before
All the on lookers attained the same than ever before
Thusly Siddh and saint saved the king
In a meticulous operation from sad and sorrow
Joy full king danced with gay
And submit all his 'Golden treshures'
Below the saints' feet, to take
Rubric Siddh and Saint hated the sight
And simply refused, because, they treat
"Gold and earth as equal in worth"

**Gold and earth as equal in worth :**

They can do all the world as gold if they eager
Finally holy saint and newly Theraiyer
Returned to Podhigai — and began to serve
To the supream yoga and unique Siddha science.
"Gold and earth as equal in worth"

**Books Reference :**


Main theme
1. Boger — 7000 (Tamil)
2. Sadhura girithalapuranam (Tamil)
3. Therayer-Vaidhyam ,, ,,

Medical Points
4. Hindu Medicine — (English)
5. Varma nool — (Malayalam)
6. Udal kooru — (Script)


---

1. Doctor : Mr. Ram! Do you know 'Linga cut?' (Medical Stone).

Student : Yes sir! It's a custom of Mohamadins. (circumsicion)

# "College Champions"



Tamil mani III B. I. M.



A. Kumar (Pre-Siddha)



D. Gnanadhas, B. Sc. II B. I. M.



A. Kumar (Pre-Siddha)
100 Meters Dash
"At the Finishing Point"



"Hey! Don't Shoot!!"
Manikkathai (Pre-Siddha)

# அந்திப் பொழுது

சோ. சண்முக சுந்தரம், B. A.
முதலாமாண்டு, இளங்கலை மருத்துவம்.

எண்ணம் என்னுள் எழுந்த பொழுது
கண்ணும் கண்டது ஒரு பொழுது
வர்ணிக்க வார்த்தையை தேடிய பொழுது
வானில் விரிந்தது வண்ணப் பொழுது

சிரத்தில் கூந்தலை விரித்த பொழுது
கருத்தில் நின்ற காலப் பொழுது
நிறத்தில் மயக்கும் நீலப் பொழுது
எழுத்தில் வடிந்த எண்ணப் பொழுது

உண்மையாய் உன்னத ஒரு பொழுது
திண்மையாய் எழுத எழுந்த பொழுது
கண்ணிமை காட்டிச் சிரித்த பொழுது
பண்ணிசை பாட வைத்த பொழுது

அந்தப் பொழுது ஒரு சுந்தரப் பொழுது
தந்த நிகரொளி அந்தப் பொழுது
இந்தக் கவிஞன் எழுதிய பொழுது
அந்தப் பொழுதே அந்திப் பொழுதாகும்.

————

வாழ்ந்துவரும் சித்த மருத்துவத்தில்

# வழக்கொழிந்த தீநீர்கள்

தமிழாக்கம் :- **நா. அனந்தபத்மநாபன்,**

இளங்கலை மருத்துவம்.

இலங்கை அரசன் இராவணன் ஓர் அறிஞன், இசைமேதை சாம வேதத்தையே பாடியவர் அவரால் எழுதப்பட்ட ஒரு மருத்துவ நூலே "அரக்கப் பிரகாசம்" – என்பது. சித்த மருத்துவ தத்துவங்களை வட மொழியில் எழுதியிருத்தல் வேண்டும்–வடவர் அறிவுக்காக இதை சிவன்–உமைக்கும், உமை – ராவணர்க்கும் – ராவணன் மண்டோ திரிக்கும் உபதேசித்ததாக உளது.

"Garba bara parikrantha kanya Mandhodari suba Ravanan paripapracha poojanthe eshtamanasam"

(கர்ப்பசுமையின் காரணமான நிலையிலுள்ள மண்டோதரி பூசைகளின் முடிவிலிருக்கிற ராவணனை முறைப்படி கேட்டாள்) – என்ற வாசகத்தோடு துவங்குவதாக – உள்ளது. இந் நூலில்–ஐம்பூதக்கூறுபாடு, அறுசுவைகள் மூலிகை பயன்கள், பற்பமுறைகள், லோகமாரணங்கள், ஆகர்ஷணம் தம்பனம் ஆகியவை பற்றி கூறப்பட்டுள்ளது.

இத்தகைய மருத்துவ, இசை, வேத-அறிவு மிக்க ஒருவரை–'அரக்கன்'–என்ற பெயரிட்டு-ஆரியர்கள் வழங்கினர் அரக்கனால் பாடப் பட்டது அர்க்க பிரகாசம் எனப்பட்டது.

அர்க்கம் என்பது–சாற்றிலிருந்து எடுக்கப் படும் சாறு என்பதாகும். திராவிட சொல்லாகிய அர்க்கம்தான் Arrack ஆக மாறினதற்கு–ஆதாரம் காட்டுவாருமுளர் (மருத்துவ சாராயம்).

அதாவது தற்போது வழக்கொழித்துபோன 'தீநீர்முறைகளை இந்நூலில் சிறப்பாகவும்-மிகுதியும் வேறு நூல்களில்லாத அளவினுக்கும் உள்ளதால்–யாம் கண்டதை-"கடன்கொடுத்த தமிழ் மருத்துவ உலகு-மீண்டும் பெற்றிட வேண்டும்" என்ற எண்ணத்தால்–இதனைச்செய்கிறோம்.

**தீநீர் எந்திர அமைப்புகள்:**

பாத்திரத்தின் மேல் பகுதியில் (வாலை முறை) ஆவியாகக்கூடிய நீர்குழல் வழியே– மற்றொரு பாத்திரத்துள் செலுத்தப்பட்டு குளிர் நிலையில்–ஆவிதிராவகம்–தீநீர்–முறையினதாக ஆதல்–அமைப்பு செய்தல் வேண்டும் இதற்கு உலோகம், அல்லது மட்பாண்டம்–போன்றவை ஏற்றது.

**தீநீர் எடுக்குமுன் செயல்முறை:**

இலைகளிலிருந்து தீநீர் எடுப்பதானால் அவற்றை சிதைத்து சமனளவு நீர்சேர்த்து 2 மணி நேரம் சூரியபுடம் வைத்தபின்பே-தீநீர் எடுக்க பயன்படுத்தல் வேண்டும்.

கடினமான மூலிகைகளை: சிதைத்து 3 மணி முதல் 6 மணி நேரம் சூரியபுடம் வைத்தபின்பே தீநீர் எந்திரத்துள் இடுதல் வேண்டும்.

மேற்கண்ட முன் செயல்முறைகளுக்கு உட்படுத்தப் பட்டு தயாரிக்கப்படும் மூலிகைத் தீநீர்களையும் அவற்றின் பயனையும் இனி காண்போம்.

1. கடுக்காயிலிருந்து எடுக்கப்படும் தீநீர் சூலை, நீர் எரிச்சல், நீர் கட்டு, காமாலை, குடற் பிடிப்பு (ஆனாகம்) முதலியன தீரும்.

2. தான்றிக்காயிலிருந்து எடுக்கும் தீநீர் நீர்த்தாகம், வாந்தி, கபம், காசம், இவை போக்கும்.

**"அர்க்க பிரகாசம்"** நூல் இலங்கை அரசன் **இராவணனால்** வடமொழியில் எழுதப்பட்ட சித்த மருத்துவ நூலாகும்.

3. நெல்லிக்காய் தீநீர்: மலபந்தம், ஆம வாதம், சூலே, சுவாசம், இவை போக்கும்.

4. இஞ்சித் தீநீர்: சுரம், தாகம் அருசி, குளிர் இவற்றை போக்கும்.

5. திப்பிலி தீநீர்: காசம், ஆமவாதம், கழிச்சல், சுரம், சூலே, இவை தீர்க்கும்.

6. மிளகுத் தீநீர்: சுவாச காசம், கிருமிகள் போம். ரோக சமனம் உண்டாகும்.

7. திப்பிலி மூலம் தீநீர்: பிலீக ரோகம், குல்மம், கபம், வாதநோய், குருதிநோய் போம்.

8. கொடுவேலிக்கிழங்கு தீநீர்: அக்னி தீபனம், காசம், கிருமி, கிரகணி போம்.

9. சீரகத் தீநீர்: மலக்கட்டு, கருப்பை சுத்தி உண்டாம்.

10. மல்லித் தீநீர்: முக்குற்றம் போம், தாகம், வாந்தி, சுவாசம் போம்.

11. அடக்காமணியன் தீ நீர்: பிலீக ரோகம், விஷம், கடினமேகம் போம்.

12. வாயுவிளங்க தீநீர்: உதர ரோகம், கிருமி, சிலேத்துமநோய் போம். வாதம், மல மந்தம் போம், குழந்தைகட்கு நல்லது.

13. அரந்தை தீநீர்: வாதசூலே, வாத பித்தம் போகும்.

14. கோஷ்டத் தீநீர்: வாதம், இரத்த பித்தம், காசம், குட்டம், இரத்த வாதம், கபம் போம்.

15. சிறுதேக்குத் தீநீர்: கபம், சுவாசம், பீனிசம், சுரம் போம்.

16. மஞ்சட்டித் தீநீர்: விடம், சிலேத்தும நோய், குருதிக் கழிச்சல் குணம்.

17. கண்டங்கத்திரி தீநீர்: கபம், சகலவித காசம் இவை போம்.

18. ஆமணக்கு தீநீர்: சூலே, தலே நோய், வயிற்றுவலி போம்.

19. எருக்கு தீநீர்: பிலீகம், குன்மம், கழிச்சல், கிருமி போம்.

20. ஊமத்தை தீநீர்: 'கடிவிஷம்' போம்.

21. வேம்பு தீநீர்: சுரம், காசம், அருசி, தளர்வு, தாகம் போம்.

22. நொச்சி தீநீர்: சூலே, குன்மம், ஆம வாதம் போம்.

23. அதிமதுரத் தீநீர்: சுரம், வாந்தி, குட்டம், அதிசாரம், மார்பு நோய் போம்.

24. கற்றுழை தீநீர்: மூளே, தீக்காயம், அதிவியர்வை போம்.

25. சங்கிலிப் பிரண்டை தீநீர் — ஒடிவு முறிவு இவற்ருல் வருந்தக் கூடிய நோய்களில் நல்ல பலனேயும் என்பு வளர்ச்சியையும் ஏற்படுத்தும்.

26. பேரரத்தை தீநீர் — முறிவு, ரணம், இவற்றை ஆற்றும் பாம்பு, தேள் — விட முறிவுக்கும் பயனுகும்.

27. கீழாநெல்லித் தீநீர்—பாண்டு, கபம், காசம், நீர்தாகம்— போம்.

28. பிரமி தீநீர் — அறிவுப் பெருக்கம், சொல்லாற்றல்—வளரும்.

29. பசளேக்கீரைத் தீநீர் — "வலியற்ற பிரசவம் வாய்க்கும்"

30. கடல்நுரை தீநீர் — சீதவீரியமாம் — மலபந்தம் போம், கபம் போம், உடல் மெலி வுண்டாம்.

**நோய்களுக்கு தீநீர்:—**

1. விடசுரத்திற்கு — பழைய சர்க்கரை, சீரகம்—இவற்றின் தீநீர்.

2. ரத்தக் கழிச்சல்—குடசப்பாலே தோல் மாதள ஓடு, இவற்றின் தீநீருடன் தேன் சேர்த்து உண்ணல் வேண்டும்.

**கிருமி நாசம் :-**

3. கந்தகத்திலிருந்து எடுக்கப்படும் தீநீர் உண்ண குருதி கிருமி நாசமாம் இரவு உறக்கம் கூடாது.

4. கும்பக்காமாலேக்கு — சிலா சத்தை கோமூத்திரத்தில் பாவனே செய்து எடுத்த தீநீர்—குணமாக்கும்.

5. இராஜ யக்ஷ்மா — (க்ஷயம்) இல வங்கம், ஏலம், திப்பிலி இவற்றின் தீநீருடன், கற்கண்டு தீநீர் சேர்த்து தேனுடன் கொடுக்க வேண்டும். (மருந்துகளே 1:2:4:8 என்ற அளவில் எடுத்து—தீநீர் செய்தல் வேண்டும்.)

6. சுவாசரோகம்:— இஞ்சித் தீநீர் — தேனேடு உண்ண வேண்டும்.

7. குதிரைச் சாணத்திலிருந்து எடுக்கப்பட்ட தீநீருடன் பெருங்காயத்தைப் பொரித்து பொடித்து சேர்த்துக் கொடுக்க சூலே உடனேயே நிற்கும். (இது சிறப்பாக கைகண்ட முறையாகும்.)

8. குஷ்டம் :— மஞ்சட்டி, தேவதாரம், வசம்பு, திரிபலே, மஞ்சள், சீந்தில், வேப்பு — இவற்றின் தீநீர் குணமாக்கும்.

9. என்பு முறிவு:— சங்கிலிப்பிரன்டை, அரக்கு, கோதுமை நீர்மருதின் தோல், —இவற்றின் தீநீருடன் – நெய் சேர்த்து உண்ண என்பு முறிவு–வளேவு குணமாகும்.

10. சூரியாவர்த்த தலேவலி — கரிசாலேத் தீநீருடன் சமன் பாலும் சேர்த்து வெயிலில் வைத்து சூடாக்கி அதை நசியம்செய்ய — ஷெ நோய்போம்.

11. சகலவிதமான தலேநோய்க்கும் :— திரிபலே, மஞ்சள், பழையசருக்கரை கிரியாத்து, வேப்பிலே, சீந்தில் – இவற்றின் தீநீரால் குணம்.

12. **நயன ரோகம் :—**

வெள்ளேச் சாரணேத்தீநீர் — கண்ணேய்க்கு சிறந்தது.

(1) தாய்ப்பாலோடு உபயோகிக்க கண் நோய்கள், கடிவிடம்போம்.

(2) தேனேடு உபயோகிக்க கண் வீக்கம் போம்.

(3) நெய்யோடு உபயோகிக்க கண்பூ போம்.

(4) எள்நெய்யோடு உபயோகிக்க திமிரம்போம்.

(5) காடியோடு உபயோகிக்க மாலேக் கண்போம்.

13. கருத்தடை:— செம்பருத்திப்பூ அரிசிக் காடியிலரைத்து கலக்கி பழஞ் சருக்கரை சேர்த்து — தீட்டுக்குப்பின் 3 நாள் உண்ண — கர்ப்பம் தரிக்கமாட்டாள்.

இதுவரை மேலே கூறப்பட்ட 'தீநீர் முறைகள்யாவும்' — அகமருத்துவத்தின்பாற்பட்டது.

இவைதவிர எண்ணற்ற வாதவைத்திய மாரண முறைகளும் இந்நூலில் உள்ளது.

சிறப்பாகவும் எளிமையாகவும் உள்ள 'தீநீர் முறைகளேயே' — யாம் இங்கு குறிப்பிட்டுள்ளோம்.

மேலும் விரிவான அறிவு வேண்டுவோர் சமஸ்கிருத மொழியிலுள்ள சித்தமருத்துவ நூலான "அர்க்கபிரகாசத்தை" — காண்பார்களாக எனக்கூறலுடன் முடிக்கிறோம்.

---

நூல் உதவி : மருத்துவர் T. K. நாராயணசர்மா (Late) கோவை.

---

## அமுத மொழிகள்

* உன் எண்ணங்களே ஒளிக்காதே. அதை வெளியிடுவது அவமானம் என்று கருதினல், அதை எண்ணுவது இன்னும் எவ்வளவு பெரிய அவமானம்.

* தைரியம் என்பது சரீரத்தின் இயல்பல்ல, ஆத்மாவின் இயல்பே. தைரியவான்களுக்கு, ஆயுதங்கள் கடைசித் தேவைகளாகத்தான் இருக்கின்றன.

* நம் தவறுகளுக்காக நாம் வருந்துவதற்கும், இன்றைய நிலேயைவிட மேலான, பரிசுத்தமான நிலேயை அடைய விரும்புவதற்கும் சின்னமாக விளங்குகிறது பிரார்த்தனே.

* எல்லோரும் தமது உரிமைகளேயே வற்புறுத்தி அந்தமட்டில் நின்றுவிடுகிருர்கள். இத்துடன் தத்தம் கடமைகளேயும் நன்கு உணர்ந்து பணியாற்றினல், பகைமையோ, குழப்பமோ ஏற்பட வழியிராது.

— தொகுப்பு : K. குமரேசன்



# மாதவிக் கொடிப் பூ

செ. சோமசுந்தரம், II B. I. M.

மாதவி நினைத் திருந்தால்
　　மாநகரும் பெற்றிருப்பாள்
மாதவனைத் தான் நினைத்தாள்
　　மாமணி மாலை பெற்றெடுத்தாள்.

தோன்றி வந்த குலமோ கணிகை
　　வேறுன்றி வளர்ந்தாள் கற்பின் தாரகை
கோவலன் என்பான் அவளது மாளிகை
　　கோமகள் அவளொரு காவிய தேவதை.

அனலிலிட்ட கண்ணுடி மீது—ஒரு
　　அமுதத் துளி விழுந்தாலும் ஏது
சந்தேகம் என்னும் வினை தூது—அவள்
　　மென் தேகம் வாடியதே அப்போது.

தாவி கொள்ளா நன் மனையாள்
　　போலி இல்லா நெஞ்சினியாள்
வேலிக் கல்லாய் இருந்த மன்னன்
　　வேசி முள்ளாள் என்று சென்ருன்.

சித்திரை பொன்மதி விழாக் காலம்
　　சிற்றிடை யாழி(ளி)ன் எழிற் கோலம்
நித்திரை யின்றி விழி ஜாலம்
　　நிறைந்த அன்பிற்கா பாலம்.

அமுதக் கனவுகள் அவன் தந்தான்
　　மகிழ்ந்த காலங்கள் மறந்து சென்ருன்
கவிழ்ந்த படகாய் அவள் நின்ருள்
　　கமழும் மல்லிகை மலராளுள்.

இனிய நெஞ்சின் திருக் கதவு—இனி
　　கனியவள் வாழ்வில் திறக்காது
தனிமை நகரில் புது உறவு
　　புனித புத்தன் பூ வரவு.

———

# பட்ட காலிலே படும்

எம். ஏ. காதர்
மூன்ருமாண்டு இளங்கலை மருத்துவம்.

துன்பம் இருக்கிறதே அது ஒரு தொடர் கதை. "பட்டகாலிலேபடும் — கெட்டகுடியே கெடும்" என்பார்கள். இந்த பழமொழி ஒருவனது வாழ்க்கையில் ஏற்படுகின்றபோது அனுபவமொழி ஆகின்றது. அடுக்கடுக்கான துன்பங்களைப்பெற்று ஒருவன் துன்பச் சிகரத்தின் உச்சிக்கே போகின்றபோது அவனது மனநிலை எவ்வாறு இருக்கும்?

அதாவது ஒருவன் வீட்டில், புறப்பக்கத்தில் கட்டப்பட்டிருந்த பசுவிற்கு பிரசவமாகும் நேரம்; அதற்கென அவன் பிரசவம் பார்த்துக் கொண்டிருக்கும்போது திடீரென இடி, மின்னலுடன் அடைமழை கொட்டெனக் கொட்டத் தொடங்குகின்றது. அப்போது மழையின் கோரம் தாங்காமல் வீட்டின் பின்சுவர் இடிந்து விழுகின்றது.

கன்றினை பிரசவித்துக் கொண்டிருக்கும் பசுவினை அப்படியே விட்டுவிட்டு வீட்டிற்குள் ஓடுகிருன் அவன். ஏனெனில் அவனது மனைவி நோய்வாய்பட்டு படுத்தபடுக்கையாய் கிடக்கின்ருள். அவளுக்கு ஏதேனும் ஆபத்து நேரிடாமல் கண்விழித்து காக்கிருன். இரவு பொழுது இப்படியே கழிகின்றது.

அவன் நிலமோ வானம் பார்த்த பூமி. மழை பெய்தால்தான் விவசாயம். எனவே மழைபெய்த ஈரம் உலருவதற்கு முன்பே நிலத்தை உழுது விதைக்கவேண்டும். அப்போதுதான் கால்வயிற்று கஞ்சிக்காவது வழிபிறக்கும். அவசர அவசரமாக நிலத்தை உழும் வேலைக்கு ஆள் அனுப்புகின்ருன். போனவன் வெறுங்கையோடு வந்தது மட்டும் அல்ல. திடுக்கிடும் செய்தி ஒன்றையும் கொண்டு வருகின்ருன். ஆம்! அச்செய்தி வேலையாள் செத்துப்போனுன் என்பதுதான்.

கன்று ஈனிக்கிடக்கும் பசு, நோய்ப் படுக்கையில் கிடக்கும் மனைவி ஆகியோரின் அருகில் இருந்து உதவவேண்டிய அவன் வேறு வழியின்றி விதை நெல்லை எடுத்துக்கொண்டு தானே புறப்படுகின்ருன்.

அந்த சமயம் பார்த்து கடங்காரபாவி வழி மறிக்கின்ருன். மானங்கெடப்பேசி, விதை நெல்லையும் பிடுங்கிக்கொண்டு போகின்ருன். செய்வது இன்னதென்று தெரியாமல் திகைத்து நிற்கின்றபோது மற்ருெரு பேரிடி தலைமீது விழுகின்றது — அங்கு ஒருவன் உறவினர் இறந்துவிட்டார் என்று சாவோலைகொண்டு வருகின்ருன்.

துயர வெள்ளத்தில் இவ்வாறு அவன் மூழ்கிக்கொண்டிருக்கும்போது வீடு தேடிவராத விருந்தினர் வந்துவிடுகிருர். தவிர்க்க முடியாத விருந்தினர் அவர். மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் அவன் திகைத்து நிற்கின்ருன். அப்போது எங்கிருந்தோ வந்த பாம்பு அவனை தீண்டிவிடுகின்றது. விஷம் தலைக்கேறி துடித்துக் கொண்டிருக்கும்போது, நிலவரி வசூல்செய்யும் அதிகாரியும், தட்சணை பாக்கிவாங்கவந்த குருக்களும் அவனை நெருங்குகின்ருர்கள்.

இந்த நிலையில் ஒருவன் இருந்தால் என்ன ஆவான்...? இவ்வாறு ஒருவனுக்கு அடுக்கடுக்கான துன்பங்கள் நெருங்கிக்கொண்டிருந்தால் அவனது உள்ளம், உடல் எவ்வாறு இருக்கும்?

இதைத்தான் ஆசிரியர் "இராமச்சந்திர கவிராயர்" சோகமெருகுடன் அழகாக கூறுகின்ருர்.

"ஆவின மழைபொழிய வில்லம் வீழ
அகத்தடியாள் மெய்நோக; அடிமைசாவ
மாவீர போகுதென்று விதை கொண்டோட
வழியிலே கடன்காரர் மறித்துக்கொள்ளச்
சாவோலை கொண்டொருவன் எதிரே செல்லத்
தள்ளவொண்ணு விருந்தினர்வரச்,
சர்ப்பந்தீண்ட
கோவேந்தர் உழுதுண்ட கடனை கேட்க
குருக்களோ தட்சணைகள் கொடு" என்ருரே.

# "Ideal Wife"

1. "Some girls are born with physical beauty, none are born with personality."

2. Remember that there is always the danger that we begin to hate whom we hurt for the same reason that we begin to love whom we help.

3. "The ideal wife is a happy wife. She enjoys marriage"

4. "It is difficult to imagine a successful and ideal doctor who is uniserable in the practice of medicine".

5. Who can play the role of this second party in the life of her husband better than the wife?

6. No one can arrive at happiness through oneself, through self-seeking.

7. Marriage is a partnership in the business of living.

8. "A lady will receive attention, respect, and courtesy if she merits it, and if she is gracious enough to acknowledge the efforts of the male".

9. The mountain climber knows that there is an element of risk in his life. Any woman knows that there is an element of risk in her life.

10. "If true love and sacrifice guide your every action, you can expect the greatest measure of earthly happiness that may be alloted to man in this vale of tears."

*—Collected from "The Ideal Wife"*
*By Magazine Committee.*

## 'அறிவு'க்கதிர் விளையுமிடம்

**பட்டுத்துரை மா. தங்கராசு**
முதலாமாண்டு பி. ஐ. எம்.

''அகில''க் கடலில்
''ஆர்வ''க் கதிரொளியால்
''மன''மேகம் எடுக்கும்நீர்
''திறமை''க் குளிர்பட்டு
''கருத்து''மழை பொழிகிறது
கருத்து மழைநீர்
''எழுதுகோல்'' வாய்க்கால் வழிசென்று
''ஏட்டு''க் கழனியில் பாய்கின்றன
அங்கே''அறிவு''க்கதிர்கள் விளைகின்றன

## இறைவன் ஒரு வண்டிக்காரன்

''வானச்'' சாலையிலே
''மேகக்'' காளைகளைப் பூட்டி
''மின்னல்'' சாட்டையால்
''இடி'' முழக்க ஓசையெழ
''மழைக்காற்று'' வண்டியோட்டும்
இறைவனொரு வண்டிக்காரன்.

# பேதை மலர்

செ. சோமசுந்தரம், II B. I. M.

முகம் பார்க்கும் கண்ணாடி யான கோதை
அகம் எங்கும் பருவத்தின் உணர்ச்சிக் கோர்வை
தன் முன்னே வந்த மன்னன் மன்மதனென்று
கண் முன்னே ஆயிரமாம் கற்பனை கொண்டு
காலத்தின் விளையாட்டுக் கவிதை எழுதி
கோலத்தை வரைந்திடுவாள் காவியம் என்று
காவியமும் ஓவியமும் கண்ணீ ரெழுத்தாய்
ஆன பின்னே வாடிடுவாள் காகிதப் பூவாய்

————

# *HOSTEL DAY HIGH LIGHTS*



"REPORTS" Deputy warden



RANI-GARLANDS "QUEEN"
(Principal) of Ignatious
Training College




ENTERTAINMENT ?

# மருத்துவ மணிமொழிகள்

தொகுத்தவர்: **S. Duraisami Sridharan,** (III B. I. M.)

## I. நோய்:

1. முதல் சாமத்தில் எல்லோரும் விழித்திருப்பர்; இரண்டாவதில் போகி விழித்திருப்பான்; மூன்ருவதில் திருடன் விழித்திருப்பான்; நான்காவதில் நோயாளி விழித்திருப்பான். (இந்தியா)
2. வயிற்றுப் பக்கம் நோய் இல்லையானுல் நோயாளி இறக்க மாட்டான். (சைனு)
3. முகத்தில் ஒரு பரு வந்துவிட்டால் உடலுக்குள் ஒரு சைத்தான் புகுந்தமாதிரி. (அயர்லாந்து)
4. வறட்சியான இருமல் வந்துவிட்டால் எல்லா நோய்களும் தீர்ந்துவிடும் [மரணம்]. (வேல்ஸ்)
5. பிணியே வராதவன் முதல் வகுப்பிலேயே இறந்து போவான். (இங்கிலாந்து)

## II. டாக்டர்:

1. டாக்டரின் மரங்களுக்கு நம் கண்ணீர்தான் தண்ணீர். (இந்தியா)
2. டாக்டர், நீதிபதி இருவரிடமிருந்தும் இறைவன் என்னைக் காப்பானுக! (துருக்கி)
3. டாக்டருக்கு மூன்று விஷயங்கள் தேவை. சிங்கத்தின் இதயம்; பெண்ணின் கரம்; கழுகின் பார்வை. (ஜெர்மனி)
4. பிச்சைக்காரர்களுக்குள் அவ்வளவு துவேஷம் கிடையாது. டாக்டர்களுக்குள்ளே அதிக வெறுப்புண்டு. (போலந்து)
5. நல்ல டாக்டர் எவரும் தாம் மருந்து உண்பதில்லை. (இத்தாலி)

## III. மருந்து:

1. பூடு தின்றபின்னும் நோய் தீரவில்லை. (இந்தியா)
2. மருந்து கால்; மதி முக்கால். (இந்தியா)
3. மருந்தை உண்டு பத்தியம் இராதவர் டாக்டரின் திறமையை வீணுக்குகின்ருர். (சைனு)
4. கடவுள் ஒவ்வொரு பிணிக்கும் ஒரு **பச்சிலை** அளித்திருக்கிருர். (பல்கேரியா)
5. நாய்க்கடிக்கு நாயின் ரோமம் மருந்தாகும். (ஹங்கேரி)
6. வெந்நீரும், எனிமாவும் எல்லாப் பிணிகளையும் நீக்கும். (இத்தாலி)
7. பூடு ஏழு பிணிகளைத் தீர்க்கும். (ரஷ்யா)

---

# An Incredible Puzzle

By EJAAZ ANSAR, B. Sc., Pre-Siddha.

THE rays of the sun entered through the window and mildly pricked trying to wake me up. I lazily streched with a full big yawn. Previous night I had been for a movie. It was the longest and the lousiest one I had ever seen. But I was compelled to sit all the four hours since I had paid Rs. 4/- for the ticket. These gruesome hours made me feel sick on my returning home. I chewed something and went to bed. The tiredness still loitering in my body made me feel tired and lazy. So I decided to take rest at home instead of going to the office and facing the hot pot manager. So having come to a decision I pulled the blanket over my head and soon I was snoring.

Suddenly a slap on my back made me wake up with a jolt. My friend was standing beside the bed with an enquiring face. He said, "My goodness, it's already 8.30 and still you are not ready for the office?" I gave him a proud smile and replied, "No my friend. Today I am the king. I am going to take complete rest and enjoy myself".

He thoughtfully sat near me litting up a cigarette. I was wondering as to what was going through his mind. Suddenly he exclaimed, "My goodness, the Government is paying you Rs. 800/- a month that means Rs. 9600 a year. But what are you doing back for it on your part?" This question startled me. I shouted "How could you say that?" I am working for the whole year sincerely". "Do you?" he asked with a teasing smile in his lips. Then handed me a paper and a pencil and ask me take down what all he says. I was wondering what ace has he got up his sleeve to pull me out of the bed. But I was determined that even wild horses shall not pull me out of my bed.

He started this way, "Tell me, how many days has a year?" "Why 365 indeed" replied I.

"How many Sundays are there in a year". This was his question.

"No doubt 52".

"So you don't work for 52 days. That means work for the balance 313 days".

"Yes. Don't I deserve those holidays?"

He asked, "How many hours a day do you work".

"I work eight hours a day neither less nor more. I am always sincere and punctual you see" said I with full of pride in my voice.

He continued, "Then it means you are not working for 16 hours a day which meants. 5840 hours a year and it comes to 243 days on which you do not work. This leaves you with 70 working days". Now all my sleep had fled and I became alert.

"Then you have 15 days C. L. Don't you?"

"Yes" I said in a weak voice.

"Well then still more days are gone and so 55 days remain. Then there are about 15 government holidays which means another 15 days are off".

I was astonished with this puzzle.

He now stood up like a boss and said in a demanding voice, "So boy, decide for yourself whether you are going to repay the government atleast in these 30 days which are left or just evade your duty to that government which pays you Rs. 9600 a year". Spell bound with surprise, I was just blinking foolishly as he walked out whistling some tune. Suddenly I remembered one thing that is it was already 9 O'clock. I jumped out of my bed and rushed to get ready so that I could be in time to the office.

So friends, what do you think about this calculation of my friend?

# குறளின் குரல்

பட்டுத்துறை மா. தங்கராசு,
முதலாமாண்டு பி. ஜி. எம்.

அரும்புமீசை, குறும்புப் பார்வை, நேர்மை நெஞ்சு, கூர்மை மதி, செயலில் தேனீ, அநீதியை அழிக்க ஆர்த்தெழுவதில் அரிமா, பசிப்பிணி விரட்டிடும் பண்ணையாளன், உடல்பிணி போக்கிடும் சித்தமருத்துவன். இத்தனைக்கும் சொந்தக்காரனவன். அவன் பெயரோ மறவன். அவன் திறத்துக்குத்தக்க பெயரது. அவனுக்கு கனிமொழி எனும் மங்கை நல்லாள் இல்லாள் ஆனாள். மதுரகானம் இசைத்திட மழலைகளும் உண்டு. அதனால் அவன் வாழ்வு கற்கண்டு. சித்தமருத்துவன் மறவன் என்றால் அப்பகுதி மக்களுக்கு மரியாதை கலந்தபக்தி. உடல் பிணியோடு உள்ளப்பிணியினையும் ஓட்டிடும் திறம் மறவனிடம் இருந்தது. மருத்துவப்பணி சம்பந்தமான உதவிக்கு ஓரளவு கல்வியறிவுள்ள மருதன் எனும் பணியாளையும், பண்ணையைக் கவனிக்க பரதன், வரதன் எனும் பணியாட்களையும் தனக்கு உதவியாக இருந்திட பணித்துக்கொண்டான்.

மறவன் மருத்துவப்பணி ஒன்றுக்காக வெளியூர் செல்லவேண்டிய நிலைவந்தது. கனிமொழி தன் தந்தையின் இல்லம் செல்ல விரும்பினாள். மருதன் அருகில் இல்லாக் காரணத்தால் வரதனிடம் தன் ஊரில் உள்ள இருநோயாளிகளுக்கு உரிய மருந்தினைக் கொடுத்துவிட்டு, (நோயாளிகளில் ஒருவருக்கு வயிற்றுப்போக்கு, மற்றொருவருக்கு மலக்கட்டு) ''மருதன் வந்தால் கனிமொழியை அவளின் தந்தையின் இல்லத்துக்கு அழைத்துவிட்டு விட்டு வரச்செய்'' என்று பரதனிடம் கூறி விட்டு பயணமானான். கனிமொழி அப்போதே பயணமானாள்.

வரதன் கொடுத்த மருந்தையுண்ட நோயாளிகள் நோயின் மிகுதியால் சாகும் நிலையை அடைந்தனர். நீர் இறைக்கச் சென்ற பரதன் விபத்துக்கு ஆளானான். வண்டியில் அமர்ந்திருந்த கனிமொழியும் மருதனும் வீட்டுக்கு முன்பாகவே வண்டி முன்னும் பின்னும் சென்றுவருவதைக் கண்டனர்.

காரணம் வயிற்றுப்போக்குக்குத் தர வேண்டிய மருந்தினை மலக்கட்டுக்கும், மலக்கட்டுக்குத்தரும் மருந்தை வயிற்றுப்போக்குக்கும் வரதன் தந்துவிட்டான். வண்டியிழுக்க வேண்டிய காளைகளை நீர் இரைக்க பரதன் பூட்டிவிட்டான். நீர் இரைக்கும் மாடுகளை மருதன் வண்டியில் பூட்டிவிட்டான். இதனால் விளைந்த விபரீதம்தான் மேலே கண்டவை.

வெளியூர் சென்று திரும்பிய மறவன் நடந்ததை நினைத்து மனம் வருந்தினான். மாடுகளை மாற்றிப் பூட்டியதால் விளைந்த விபரீதத்தைவிட பணியாட்களை மாற்றிப் பணி செய்யப்பணித்ததால் ஏற்பட்ட விபரீதத்தை எண்ணினான். யார்யார் எப்பணிக்கு உரியவர் என்று ஆய்ந்து அவ்வாறு அவர்களைப் பயன் படுத்தவேண்டும் இன்றேல் இவ்வாறு விபரீதம் விளையும் என நினைத்தவாறு நடந்தான். அப்போது தெய்வப்புலவர் திருவள்ளுவர் குறள் ஒன்று அவன் மனத்திரையில் இவ்வாறு குரல் தந்தது.

''இதனை இதனால்இவன் முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன் கண்விடல்'' (குறள் 517)

———

# *Mother......*

*by Ejaaz Ansar,* B. Sc.,
Pre-Siddha

The heavens may shower its flowers on you.
And bathe you with pearls of dew.
Oh mother! you smile only by us a few,
Our presence, our voice and our touch on you.

We your flesh, your blood and your bone,
However far may we be gone.
Your song of love in our craddle,
Is the bliss and our journey's saddle.

Mother, your words of wise,
Flash often upon thy inward eyes.
Our only prayer towards the heaven,
"Please give all happiness and health to our gaurdian"

————

# Collection from ESSENCE OF YOGA

A. S. Bhagavatheeswaran, IInd B. I. M.

1. Do not say "From to-morrow, I will be regular". That "to-morrow" will never come.

2. "Early to bed, Early to rise, makes a man healthy, wealthy and wise".

3. Never, never say, "I have helped that man". Feel and think, "That man gave me an opportunity to serve. This piece of service has helped me to purify my mind. I am extremely grateful to him".

4. Always repeat the formula "Even this will pass away". You will then be always beyond grief and sorrow.

5. "As you think, so you become". This is the immutable psychological law. Your thoughts make your life. You can choose your thoughts. You can choose your mode of thinking. You can make your life as you choose.

6. In the morning resolve: "I will not yield to anger to-day. I will practise celibacy to-day. I will speak truth to-day".

7. Sri Krishna says: "Work incessantly. Your duty is to work but not to expect the fruits thereof".

# One of the Seven Wise Men of Greece

By RAJASEKARAN (Pre-Siddha)

Sophist wishing to puzxle him with difficult questions, the sage of Miletus replied to them all, without the least hesitation, and with the atmost precision:-

1. What is the oldest of all things? "God, because he has all always existed."

2. What is the most beautiful of all things? "THE WORLD, because it is the work of God."

3. What is the greatest of all things? "SPACE, because it contains all that has been created"

4. What is the most constant of all things? "HOPE, because it still remains with man, after he has lost everything else"

5. What is the best of all things? "VIRTUE, because without it there is nothing good."

6. What is the quickest of all things? "THOUGHT, because in less than a moment it can fly to the end of the universe."

7. What is the strongest of all things? "NECESSITY, which makes man face all the dangers of life."

8. What is the easiest of all things? "TO GIVE ADVICE."

9. What is the most difficult of all things? TO KNOW THYSELF."

10. What is the wisest of all things? "TIME, because it discovers all things."

— From the book "Jeeva Brahmaikya Vedanda Rahasyam."

---

* அஞ்சாமை மனிதன் பெறக்கூடிய எல்லாக் குணங்களிலும் முதன்மையானது.

* எங்கு கோழைத்தனம் மிகுந்திருக்கிறதோ அங்கு ஆண்மையோ, தியாகமோ இருக்கமுடியாது.

* சத்தியநோக்கம் இல்லாது போய்விட்டால் வாழ்வின் தத்து வங்கள் எதையும் அனுஷ்டிக்க முடியாமலே போய்விடும்.

* கத்தியின் கூர்மையான முனையைவிட அகிம்சை வழிச் செல்லும் ஆன்மாவின் உறுதிப்பாடு சக்திவாய்ந்தது. அகிம்சை கோழைகளின் ஆயுதமன்று. அது வீரர்களுக்கே உரியது.

* உடலுழைப்பைச் செய்யாதவர்கள் சேவைசெய்ய முடியாது உழைக்கும் மனிதனே உயிர்வாழும் உரிமை பெறுகிருர். சோம்பி வறுமையில் வாடும் மக்களுக்கு உழைப்பாகவும் உணவாகவும்தான் ஆண்டவன் காட்சியளிக்க முடியும்.

# Sweet competitions by editorial board

## LIST OF PRIZE WINNERS

1. *Essay competition :*
   (1) S. Jegajothi Pandian — First prize
   (2) J. W. Tamil Selvi — Second prize

2. *Drawing competition :*
   (1) N. Anandhapadmanaban — First prize
   (2) V. Vimala — Second prize

3. *Elocution competition :*
   (1) J. Padmananthan — First prize
   (2) Pugazhenthi — Second prize

4. *A. Vocal music (Gents) :*
   (1) K. Soma Sekar — First prize
   (2) S. Jegajothi pandian — Second prize

   *B. Vocal music (Ladies) :*
   (1) Shankaralakshmi — First prize
   (2) A. Thamayanthi — Second prize

5. *Instrumental music :*
   (1) V. Stanley Jones — First prize
   (2) V. K. Gurunathan — Second prize

6. *Dance :*
   C. Subramaniam

7. *Photographic competition :*
   (1) C. Somasundaram — First prize
   (2) T. K. Kalyanasundaram — Second prize

# கந்தகப் பொடி

[V. சவரிமுத்து வைத்தியர், R. I. M. P.]

புவியியல் அறிஞர்கள் கந்தகத்தை ஒரு கனிச்செல்வமாகக் கணிக்கின்றனர். இக்கனிச் செல்வம் எண்ணற்ற வகைகளில் பயன்படு கின்றது. இது மனித உடலில் தோன்றும் பல்வேறு நோய்களைத் தீர்க்கும் மருந்தாகவும் பயன்படும் என்பதைப் பண்டையச் சித்தர்கள் கண்டுள்ளனர். இயல்பிலேயே தீப்பிடிக்கும் தன்மைகொண்ட கந்தகத்தை, சித்தர்கள் பற்பல மூலிகைச் சாறுகளுடன் அரைத்து அதிசயிக்கத்தக்க விதத்தில் ஆற்றல் புரியச் செய்துள்ளனர்.

கந்தகம் என்ற சொல் கந்து+அகம் எனப் பிரியும், 'கந்து' என்றால் தீ, 'அகம்' என்றால் உள்; எனவே 'கந்தகம்' என்பது தீயை உள்ளடக்கி இருப்பது எனப்பொருள்படும். இது வெண்மை, மஞ்சள், சிவப்பு, நீலம் என நான்கு நிறங்களைக்கொண்டது. இஃது இரும்பு, செம்பு, ஈயம், ரஸம் முதலிய உலோகங்களோடு இணையும் தன்மை உடையது. எனவே கந்தகம் பலமுறைகளில் மருந்து தயாரிக்கப்பயன்படுகிறது. சித்தர்கள் இதைப் புளிச்சரக்கு அதாவது பெண்சரக்கு என்றும், நாதப்பிரிவைச் சார்ந்தது என்றும் வகுத்துள்ளனர்.

சித்த மருத்துவத்தில் கெந்தி, கவி, காரினி, சத்தி, நாதம், குணச்சல், குருந்தம், செந்தூரதாதி, செந்தூரக்குரு, தந்தி, பொன்வாணி, மாதேவி, உமாதேவி, தேவியுரம், புலிங்கம், பெண்நாற்றம் என கந்தகம் பலப்பெயர்களில் வழங்கப்படுகிறது.

சித்தர்கள் கந்தகத்தின் தன்மைகளைச் சரிவர உணர்ந்திருந்தனர். எனவே இதைப் பல மருந்துகளோடு இணைத்து மாத்திரைகள் திராவகங்கள், பதங்கங்கள், பஸ்பங்கள், வடகங்கள், செந்தூரங்கள், இரசாயனங்கள், மெழுகுகள், வில்லைகள், செயநீர்கள், களிம்புகள், குழம்புகள், தைலங்கள், எண்ணெய்கள் என ஆயிரக்கணக்கான முறை களில் மருந்துகள் தயாரித்தனர். அம்மருந்து களால் ஆயிரமாயிரம் நோய்களையும் தீர்க்க வழிகாட்டினர். இம்முறைகளைச் சரிவரக் கடைபிடிக்கும் இன்றைய சித்த மருத்துவர் களும் மங்காப்புகழுடன் பல நோய்களுக்குச் சிகிச்சை அளித்துவருகின்றனர் என்பது வெள்ளிடைமலை.

எடுத்துக்காட்டாக — கந்தகத்தால் தயார் செய்யப்படும் ஒரு மருந்து **'கந்தகப் பொடி'** இதைத் தயாரிக்க கந்தகத்தை ஆனைச் சவுட்டடி (கரிதடம்), புளியிலை, பச்சை மஞ்சள் போன்ற மூலிகைச்சாற்றில் சம அளவு கலந்து தீ எரித்து இறைச்சி மாதிரி கட்டியாக்கி, இளம் பருவத்தில் எடுக்கவேண்டும். பின் நீரோட்டி (மரவெட்டி) எண்ணெய்யில் வறுத்துப் பொடி யாக்கவும். இப்பொடியைக் காய்ச்சிய பசுவின் பாலில் கலக்கிக் குடித்தால் சூலைப்புண், திமிர், வாதம், மேகம், பதகரி (Eczyma), தொழு நோய், விஷநோய்கள், சருமநோய்கள் ஆகியவை அகலும். இஃது எனது சொந்த அனுபவத்திலும் கண்ட பேருண்மையாகும்.

இது போன்றே **"கந்தக சீனி"** என்ற மேக நோய் நிவாரணியும் அற்புத செயல் புரிகிறது.

### கெந்தக சீனி

வேண்டிய அளவு கந்தகத்தோடு சம அளவு கறியுப்பு சேர்த்து அரைத்து தண்ணீர் விட்டு கழுவவும். இப்படி பத்துமுறை சேர்த்து அரைத்துக் கழுவிப்பார்க்க — கந்தகமானது நீறின மாதிரி சீனிபோன்று இருக்கும். இது எந்த மேகத்தையும் வேரறத்தீர்க்கும் ஆற்றல் மிக்கது. இம்மருந்தை 10 அரிசி அளவு எடுத்து சித்திரபாலைக் கிழங்கைச் சூரணித்து அதில் பசுநெய்யைக் குழைத்து அதற்குள் வைத்து அருந்தவும். நோய் தீரும்வரை அருந்தலாம்.

கந்தகத்தைப் போன்று இன்னும் பல கனிப்பொருட்கள் இருக்கின்றன. அவைகளைப் பக்குவப்படுத்தி மருந்தாகப் பயன்படுத்தும் முறைகளும் சித்தர்களால் கூறப்பட்டுள்ளன. ஆனால் அவற்றைச் சரியாகத் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்த அறிவும், ஆற்றலும் அனுபவமும் பெற்ற மருத்துவர்களும் அரசு ஆதரவும் இன்றியமையாதது ஆகும்.

ஜீவானந்தா சித்தா ஆயுர்வேத பார்மஸி, புதூர் அருளானந்தபுரம்,
திக்கணங்கோடு P. O., குமரி மாவட்டம்.

# Govt. College of Indian Systems of Medicine, Palayamkottai

## ANNUAL REPORT FOR THE HOSTELS 1976 — 77

It gives me a great pleasure to present the annual report of hostels for the year 1976 — 77.

There are two separate hostels for both gents and lady students. The women's hostel building is situated temporarily inside the college hospital campus. The gents hostel is situated at Vannarpet in the old Children's Hospital. Eventhough adequate fecilities are not available in the above hostels, for present day medicines, some developments are in progress with the help of public works department. Still it remains a problem for electricity authorities and students regarding the hostel building and water fecilities. Separate blocks are provided for the Post-graduate students and the internee. In these circumstances, I really thank the inmates for their maximum co-operation even with less fecilities.

In both the hostels cost sharing mess is functioning. The hostels are provided with radio, loud-speakers, daily news papers etc. Seperate play ground fecilities have been provided with the help of physical education departments. With the help of the public works departments protected water supply has been feciliated in the hostels-restricted water supply being a problem that we have to face throughout.

There is less security for the belongings of the inmates because of the lack of proper building fecilities.

As the electricity supply, water and drainage fecilities are common for both the E. S. I. Hospital, which is situated in the gents hostel campus, and the gents hostel there are certain administrative difficulties in collecting charges for the above. Due to the above said difficulties we are not able to repay the caution deposit amount immediately, when the inmates vaccate the hostel. The construction of the new hostel buildings has been postponed by the Government due to inadequate finance. The administration is sympathetically looking into the grievencies of the inmates with the help of the public works department.

I request the Director of Indian Medicine to try to provide all the buildings inside the campus for the use of the hostel, until the hostel buildings of our own are constructed to avoid the administrative difficulties.

On this occassion I would like to express my heartful thanks to the Director of Indian Medicine for having given me an opportunity to do service to the younger generation as Deputy Warden. I extend my heartful thanks to the Principal for all the co-operation and guidance he has extended. I thank all the learned members of the staff, the Office staff, hostel staff, Office bearers of the hostel Association, and the inmates of the hostels for their kind co-operation in making the administration of the hostel smooth and a success.

I thank you one and all.

*DEPUTY WARDEN*

# *Acknowledgement:-*

We have great pleasure in thanking all those who have contributed their best, by way of sending good wishes blessings, advertisements and donations, but for whose help we could not have published this issue.

Our thanks to our beloved Director Dr. Pon. Gurusironmani and Principal Dr. M. V. Ramanan for their kind encouragement, Dr. Samuel, Dr. Peter and Dr. Somasundaram for their valuable guidence in financial matters; Dr. D. Bhupathi - Deen Madurai Medical College for his scholarly article. We are thankful to Dr. Ganapathy and Dr. Thirunavukkarasu for their unfailing co-operation and to all the members of staff for their help in one way or other.

Last but not the least our thanks to Mr. Anandapadmanaban & Mr. Jeyapaul for all their tireless efforts to make this issue a successful one.

Through this journal we express our gratitude to our brothers & sisters of our institution, particularly the "Students Association 1977-78" for the splendid co-operation rendered by them in the successful release of the magazine.

We will be failing in our duty if we do not thank Messrs Jeya Traders & Hilal Press for the excellent get up of this Magazine, Messrs Hilal Press for the beautiful printing, Messrs. Chitra's Studio for Photographs and Messrs Royal Process for their help in making blocks etc, at the shortest notice.

Magazine Committee.

# *In Memorium*



Dr. A. Vallimayil, B. I. M. [ M. D. (Siddha) ]

"Life, like a dome of many coloured glays,
Stains the white radiance of Eternity,
Until death tramples it to fragments"

விளம்பரங்கள், நன்கொடை
கொடுத்து உதவிய அன்பர்கட்கும்,
வாழ்த்துதல்களை நல்கிய
அனைவர்கட்கும், மலர் விரைவில்
மலர்ந்திட உதவிய அனைத்து
நண்பர்கட்கும் எங்களின்
உளமார்ந்த நன்றிகள் ஆயிரம்!
ஆயிரம்!!

மலர் வெளியீட்டுக் குழு

இந்திய மருத்துவக் கல்லூரி மலரின் வெற்றிக்கு எமது நல்வாழ்த்துக்கள்!



# நரம்பு சுளுக்கு எலும்பு முறிவுகளுக்கு



பெத்தாக்கவுண்டர் குமாரர்
வைத்தியர்
C. P. பொன்னுசாமி கவுண்டர்
R. I. M. P.

**100-வது**

C. P. பொன்னுசாமி கவுண்டர்
குமாரர்
டாக்டர்
C. P. குப்புராஜ், R. I. M. P.,
R. H. M. P.

## ஆண்டின் சிறப்பான சேவை!







எமது வைத்தியசாலை கட்டிடம்

நோயாளிகள் தங்குவதற்கு இடவசதி உண்டு.

எக்ஸ்ரே படம் எடுக்கப்படும்.

# பெத்தாக் கவுண்டர் வைத்தியசாலை

**474, பெரிய கடை வீதி கடைசி (செட்டி வீதி) கோயமுத்தூர் - 1**

ரிஜிஸ்டர் No. 18655 :: போன்: 32595

எலும்பு முறிவுகளுக்கு பாலுராஜின் **சிவசக்தி தைலம்** உபயோகித்து குணமடையுங்கள்!

இத்தைலம் மனித திரேகத்தில், கை கால் நரம்புசுளுக்கு, எலும்பு முறிவு, கை கால் முட்டுகள் பிசகல், தோல் சதை நரம்பு பிரண்டுபோதல், ரத்தம்கட்டி வீங்கி மோதுகட்டல், முதுகுகூன் குழந்தைகளுக்கு நெஞ்சில் உரம், ஆருத ரணம், கட்டிகள், குழந்தைகளுக்கு அம்மை வார்த்து கைகால் முட்டுக்களில் மோதுகட்டல், பிறவி ஊனம் முதலியவைகளை ஆச்சரியமாய் குணப்படுத்தும்.

ஹிலால் பிரஸ், திருநெல்வேலி—6